# DIVINE HOME™

## WOODEN POOJA CABINETS

**QUALITY | CLASS | STYLE**



Model: SO 3171



Model: CLS



Model: 2558

*Divine Beauty For Homes*



Model: 06 S + Door



Model: S/O 2780



Model: 010 M + Door

**Dealership Enquiry Solicited**

MARKETED BY

# Vichandra Enterprises

New #14, Madha Church Road, (via) Santhome High Road,
(Behind IOB Santhome Branch), Santhome, Chennai - 600 028.
E-mail: divinehome@touchtelindia.net | Website: www.vichandra.com
**Phone: 24611955 Telefax : 52069099 Cell : 9841299669**

Time: 10.00 am to 8.30 pm / Open on All Days

# ANNUAL CLEARANCE SALE

# 50% வரை

# தள்ளுபடி

மார்ச் 14 முதல் 31 வரை

**அதிர்ஷ்டம்.. ஆனந்தம்.. விறுவிறுப்பு..**

அனைத்தும் ஒருங்கிணைந்த ஓர் அதிரடி விற்பனை.
இதோ, வருடாந்திர விற்பனை பரபரப்புடன் ஆரம்பம்.
அனைத்து ஆடை ரகங்களுக்கும் 50% வரை தடாலடி தள்ளுபடி.

பாதி விலைகளில் முழுமையான சந்தோஷம்.
இந்த அதிர்ஷ்டத்தை உங்களால் நழுவ விடமுடியுமா?

## தி சென்னை சில்க்ஸ்®

தமிழகத்தின் மாபெரும் ஜவுளி சாம்ராஜ்யம்

23, உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை - 17. ✆: 24310888
558-560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. ✆: 2391555
74, புது மார்க்கெட் வீதி, திருப்பூர் - 4. ✆: 2242888, 5338888
85-A, R.K.V. ரோடு, ஈரோடு - 1. ✆: 2213270
10, W.B. ரோடு, திருச்சி-2. ✆:2708888

ISO

Shop online at www.thechennaisilks.com



## வட்டமேஜை

# வழ... வழ... தள... தள!

✉ சுமி கூட ஆரோக்கியம் பற்றி கவலைப் படத் துவங்கி விட்டாரே! வயது கூடு கிறதோ!
பெங்களூர், தாமல் கண்ணன்

✉ ஈ-லஜ்ஜாவதியின், 'அமெரிக்கா பக்கத்திலே வந்திருச்சு, அடுத்த வீடுதான் அமெரிக்கா மாதிரி எங் கேயோ, போயிடுச்சு - ஈ வரி கள், ஹி..ஹி..' (ஈ - ஈ அக்ஷரலக்ஷம் பெறும் வைர வரிகள்.
சென்னை - 47, பிச்சைசுவாமிநாதன்

✉ ஆன்மிகம் என்பது பற்றி பதினாறு வி.ஐ.பிக்களின் கருத்துகளை நடுப்பக்கத்தில் வெளியிட்டு ஆன்மிகச் சிறப்பிதழுக்குப் பெருமை சேர்த்த கல்கி, பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க என்று வாழ்த்துகிறோம்!
திருவாரூர், வாணிமகாலட்சுமி

✉ ஒரு தாயின் 'ஏக்கு(ம்)'த்தை ரத்தினச் சுருக்கமாகச் சொன்ன அகிலா கார்த்திகேயனின் குட்டிக் கதையில் அழுத்தம் அதிகம்!
புனலூர், பி.எல்.பரமசிவம்

✉ வாழும் வழிகாட்டிகளின் பதில்கள், வாழ்க்கைக்குத் தேவையான சிந்தனைகள். அப்படியே பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டேன்.
ஏ.பாளையம், பெ.அமல்ராஜ்

✉ 'வழவழ'ன்னு இருக்கிறது...

## உதவ வேண்டுகிறோம்

கும்பகோணம் தீ விபத்து - தொண்ணூற்று நான்கு பச்சிளங்குழந்தைகளை பலிவாங்கிய சம்பவம். இதற்குக் காரணம் கீற்றுக் கொட்டகைகளில் பள்ளிக் கூடங்கள் நடைபெறுவதுதான் என்று குற்றச்சாட்டு எழ, அந்தக் கீற்றுக் கொட்டகைகள் நீக்கப்பட்டு, பல இடங்களில் பள்ளிக் கூடங்கள் நடத்தப்படுவது தடைப்பட்டுள்ளது. இதனால் கடுமையாக பாதிக்கப்பட்ட கல்வி நிலையங்களுள் ஒன்று, மயிலாடுதுறை அருகிலுள்ள மணல்மேடு கிராமத்தில் உள்ளது. இப்பள்ளி, ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துத் துறவியும், பிஜித் தீவு ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைவருமான சுவாமி ருத்ரானந்தாவால் தொடங்கப்பட்டது. சாதாரண நர்சரி பள்ளியாகத் துவக்கப்பட்டு, ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயா மெட்ரிக்குலேஷன் பள்ளியாக சீராக வளர்ச்சி பெற்று வந்த இந்தக் கல்வி நிறுவனம், இன்றைக்கு கீற்றுக் கொட்டகைகள் கூடாது என்ற அரசு உத்தரவின் காரணமாக தனது கல்விப் பணியை முன்புபோல தொடர முடியாத சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

மணல்மேடு அருகே உள்ள புத்தமங்கலம் கிராமத்தில்தான் கல்கி கிருஷ்ணமூர்த்தி பிறந்தார். இளமைப் பருவத்தில், அமரர்

'தளதள'ன்னு இருக்கிறது... முன்னது 'கல்கி'யின் அட்டை பற்றியது. பின்னது 'கல்கி'யின் சரக்கு களைப் பற்றியது.
திசையன்விளை, ஆர்.ஜி.கல்யாணி

✉ 'கலாமின் கனவு; பிரதமரின் வருத்தம்...' வெறும் மூன்று பக்கத் தலையங்கம் மட்டுமல்ல, ஒட்டுமொத்த இந்திய மக்களின் எண்ணங்களின் பிரதிபலிப்பு!
திருவாரூர், ரெ.இராமசுப்ரமணியன்

✉ 'கலவை' கிராமத்தின் இப்போதைய சூழலை நேரில் கண்டு அனுபவித்த உணர்வை ஏற்படுத்தியது இப்போது ஜயேந்திரா கட்டுரையும்... படங்களும்...
போடிநாயக்கனூர், எஸ்.எம். பாலசுப்ரமணியன்

✉ "கடவுள்" என்ற தலைப்பில் அமரர் கல்கி கட்டுரை எந்தக் காலத்துக்கும் பொருந்தும் வண்ணம் உண்மையாக இருந்தது.
சென்னை - 1, கே.ஆர்.ரவீந்திரன்

✉ பிரம்மாண்டத்தில் வேண்டுமானால் திருப் பூந்துருத்திக்கு திருவையாறு அண்ணனாயிருக்க லாம். ஆனால் சீனியாரிடியில் திருப்பூந்துருத்தி தான் அண்ணன்!
சென்னை - 91, திருப்பூந்துருத்தி பாபு



கல்கியும் முத்துக்கிருஷ்ணனும் (ருத்ரானந்தரின் பூர்வாசிரமப் பெயர்) நெருங்கிய இலக்கிய நண்பர்களாகத் திகழ்ந்தவர்கள். இந்தப் பணிக்கு உதவ விரும்புவோர் ஸ்ரீ ராமகிருஷ்ண தொண்டர் சங்கத்துடன் தொடர்பு கொள்ளலாமே!

முகவரி:

ஸ்ரீ ராமகிருஷ்ண தொண்டர் சங்கம்,
மணல்மேடு - 609 202 மயிலாடுதுறை.
போன்: 954364 / 254484 254211


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# குட்டித் தலைவர் பெரிய பிரச்னைகள்!



“குட்டித் தலைவர் அவைக்கு வந்தும் பேசாமல் இருக்கிறார். தி.மு.க. உறுப்பினர்களை கட்டுப்படுத்த எந்த முயற்சியும் எடுப்பதில்லை” - சமீபத்தில் முதல்வர் ஜெயலலிதா சட்டமன்றத்தில் ராணுவம் தொடர்பான சர்ச்சையின் முடிவில் பேசியதுதான் இது. “குட்டித் தலைவர்” என்று ஸ்டாலினை வம்புக்கிழுத்து நையாண்டி செய்திருக்கிறார் முதல்வர்.

முதல்வர், மரபுக்கு மாறாக ‘குட்டித் தலைவர்’ என்ற வார்த்தைப் பிரயோகத்தைச் செய்திருந்தாலும், ஸ்டாலின் அப்படித்தான் வளர்க்கப்பட்டு வருகிறார் என்பது மறுக்க முடியாத உண்மை. எமர்ஜென்ஸி காலத்துச் சிறை, அதைத் தொடர்ந்து இளைஞர் அணிச் செயலாளராக இருந்து வளர்ந்தது என்பதெல்லாம் ஒரு பக்கம் இருந்தாலும், “அடுத்ததாக இவர்” என்று அடையாளம் காட்டப்படுவதால், உச்சியை நோக்கி இவரது பயணம் சுலபமாக்கப்பட்டிருக்கிறது. இப்போது கழகத் துணைப் பொதுச் செயலாளர், இளைஞர் அணிச் செயலாளர் என்று இரு நியமனப் பதவிகள். முரசொலி அறக் கட்டளையின் தலைவர் பதவி வேறு. ஆனால், “அடுக்கடுக்காக வாய்ப்புகளிருந்தும் ஒரு தலைவருக்கு உண்டான தகுதிகளை அவர் வளர்த்துக் கொள்வதில்லை” என்ற குற்றச்சாட்டு பரவலாகவே இருக்கிறது.

“சட்டசபையில் எந்தப் பிரச்னையிலும் பேசுவதில்லை, போர்க் குணம் கிடையாது; சாணக்கியமோ சாதுர்யமோ இல்லை, நம்பியவர்களை, ஆதரவாளர்களை நட்டாற்றில் விட்டு விடுவார்” என்றெல்லாம் தி.மு.க வட்டாரத்திலேயே பரவலாகப் பேச்சு உண்டு. இருந்தும் பெரும்பாலான கட்சித் தொண்டர்கள் அவரை அடுத்த தலைவராக ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாகத்தான் மத்திய மந்திரிகள் உட்பட, கழக முக்கியஸ்தர்கள் அவரது 53வது பிறந்த நாளின் போது நேரில் தங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்தார்கள். தமிழகமெங்கும் கட்சிப் பிரமுகர்கள் “வருங்காலத் தமிழகமே” என்று



பத்திரிகைகளில் விளம்பரங்களாக அள்ளிக் கொடுத்தார்கள். ''உட்கட்சிக் கூட்டங்களில் ஸ்டாலின் புகழ் பாடப்படும் போது, சில சமயங்களில் தலைவரே (கருணாநிதி) கூட சங்கடத்தில் நெளிந்தது உண்டு'' என்று சொல்கிறார் மூத்த பிரமுகர் ஒருவர்.

''தா.கிருஷ்ணன் கொலை செய்யப்பட்டபோது இறுதி மரியாதை செய்யச் சென்ற ஸ்டாலின், அங்கு நிலவிய தி.மு.க.வுக்கு எதிரான சூழலை, சாதுர்யமாகச் செயல்பட்டு மாற்றியிருக்கலாம். ஆனால் செய்யவில்லை. அதனால் வெறுப்பு வளர்ந்து, மதுரை கஞ்சித் தொட்டிப் போராட்டத்தில் போலீஸாரால் தாக்கப்பட்டார், அவரது ஆதரவாளரான மதுரை சலீம். ஆனால் அவரை ஸ்டாலின் அக்கறையுடன் கவனிக்கவில்லை. அவரது உறுதியான ஆதரவாளர்களாக இருந்த மதுரை வேலுச்சாமி, திருத்தணி சிவாஜி போன்றோரையும் கைவிட்டுவிட்டார். கடந்த இருபது வருடங்களில் அவருடன் தொடர்ந்து நெருக்கமாக இருந்து வருபவர்கள் ஒன்றிரண்டு பேர்தான். அப்படி நெருக்கமாகப் பழகுபவர்களும் அவரை மேம்படுத்த எந்த முயற்சியும் எடுப்பதில்லை'' என்று கூறுகிறார் அந்த மூத்த பிரமுகர்.

''ஸ்டாலினுக்குக் கிடைத்தது போன்ற வாய்ப்பு நமது இந்திய அரசியலில் வேறு பலருக்கும் கிடைத்திருக்கிறது. அதை அவர்கள் சரியாகப் பயன்படுத்தியிருக்கிறார்கள். உதாரணமாக இந்திரா காந்தி. ஆனால் ஸ்டாலினுக்குக் கிரீடம் சூட்டி, செங்கோல்

**சர்ச்சை சர்வே - 2**

ஸ்டாலினின் அரசியல் பணிகளால் தி.மு.க.வின் இமேஜ் உயர்ந்திருக்கிறதா? ஆம் / இல்லை என்ற உங்கள் கருத்தை, நாலு வரி விளக்கத்துடன் அனுப்ப கடைசித் தேதி : **28.3.2005**

கொடுத்தும் அதைக் காப்பாற்றிக் கொள்ளத் தவறி விட்டார். அவர் பளிச்செனப் பிரகாசிக்க வேண்டிய காலத்திலும் அவ்வாறு நடைபெற வில்லை. ஒரு வேளை அவரே 'தனக்கிது போதும்' என்று முடிவு செய்து விட்டார் போலிருக்கிறது. கடுமையான உழைப்பு, பேச்சுத்திறன், எழுத்துத் திறமை ஆகிய வற்றை வெளிப்படுத்த வேண்டிய ஸ்டாலின், மிகவும் பின் தங்கிவிட்டார் என்றே சொல்ல வேண்டும். எதிர்கால அரசியலில் தி.மு.கவின் ஒரு பகுதியினர் அவரைத் தலைவராக ஏற்றுக் கொண் டாலும், கலைஞரைப் போல ஒட்டு மொத்த தமிழ்ச் சமுதாயத்துக்கு உகந்த தலைவராக அவர் உயர்வது கடினம்" என்று சொல்கிறார் அ.இ.அ.தி.மு. கழகத்தின் முன்னணி மேடைப் பேச்சா ளர்களில் ஒருவர்.

"ஸ்டாலின் தமது திறமைகளைத் தொடர்ந்து வளர்த்துக் கொண்டு தான் வருகிறார். மேயராக இருந்து பணியாற்றி யதை இங்கு சொல்லலாம். மேலும் சட்டமன்றத்தில் அவர் பேசுவது இல்லை; சர்ச்சைகளின் போது மற்ற சிலரைப் போல சுறுசுறுப்பாகச் செயல் படு வதில்லை என்று சொல்வதெல்லாம் சரியல்ல. சட்டமன்ற தி.மு.கவைப் பொறுத்தவரை தலைவர், துணைத் தலைவர், கொறடா, செயலாளர் என்றி ருக்கிறார்கள். எனவே அவர்கள்தான் பிரச்னைகளின் போது எழுந்து பேசு கிறார்கள். ஆகையால் அது போன்ற சமயங்களில் ஸ்டாலின் செயல்படாமல் இருப்பது சரியான அணுகுமுறைதான். மேலும் அவர் ஏதாவது சொல்ல எழுந் தாலோ அல்லது பேச முயற்சித்தாலோ, ஒட்டு மொத்த ஆளுங்கட்சியும், அவரைக் குறி வைத்துத் தாக்கும் விதமாக எழுந்து தடை போடுவார்கள். மேலும் பேராசிரி யர், துரைமுருகன் ஆகியோர் இருக்கும் போது, முந்திரிக் கொட்டைத் தனமாகச் செயல்பட அவர் தயங்குவதில் ஆச்சர்யம் இல்லை. சட்டமன்றத்தில் பேசுவது இல்லையே தவிர, பொதுக்கூட்டங்களில் அவர் நீண்ட உரையாற்றி மக்களைக் கவர் கிறார். உட்கட்சி விவாதங்களில் நல்ல ஆலோசனைகளைக் கூறுகிறார். நெருக்க மாக யாரையும் வைத்துக் கொள்ளாததற் குக் காரணம், பெயரை அவர்கள் தவறா கப் பயன்படுத்திக் கொள்வார்களோ என்ற தயக்கம்தான்" என்கிறார் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் ஒருவர்.

இந்தச் சூழலில் ஸ்டாலி னைக் கொலை செய்து, அந்தப் பழியை அழகிரி மீது சுமத்தி, கட்சியில் குழப்பத்தை உண்டாக்க தமிழக போலீஸின் உளவுத் துறை சதி செய்வதாக வதந்தி பரவி வருகிறது!

நடந்து முடிந்த திண்டுக்கல் தி.மு.க. மாநாட்டின் போது ஸ்டாலினுக்கு வைக்கப்பட்ட கட் அவுட்கள், பேனர்கள், கொடுக் கப்பட்ட முக்கியத்துவம் ஆகி யவை அவரது செல்வாக்கைப் பிரதிபலித்தன. தி.மு.க. தொண் டர்கள் மட்டுமின்றி, மக்களும் ஏற்கும் அரசியல் தலைவராக முழுமை பெற ஸ்டாலின் இன்னமும் நிறைய உழைக்க வேண்டியிருக் கிறது.

— ப்ரியன்



புதுவையில் ஒரு பேருந்தில் ஃபுட்போர்டில் பயணம் செய்பவர்களை எச்சரிக்கும் வகையில் எழுதப்பட்டிருக்கும் புதுக்குறள்:

"தொங்கினாற் படியில்
பிடிநழுவிப் போகுங்கால்
சங்கினாற் ஊதப்
படும்."

- எம். விநோத்

www.thomascook.co.in

# உல்லாசப் பயணத்தில் ஐரோப்பாவை அரைகுறையாய் ஏன் கண்டுகளிக்க வேண்டும்?

## தாமஸ் குக் மட்டுமே ஐரோப்பாவை முழுமையாக கண்டுகளிக்க வழி வகுக்கிறது.

**17 நாட்கள் யூரோப்பியன் எக்ஸ்ட்ராவேகன்ஸா, 2 நாட்கள் துபாயில் தங்குவது உட்பட.**
இத்தாலி, வாடிகன், ஆஸ்திரியா, லைச்டென்ஸ்டெய்ன், ஸ்விட்சர்லாந்து, ஜெர்மனி, பெல்ஜியம், ஹாலந்து, பிரான்ஸ், லண்டன், துபாய்.

**கண்டுகளிக்க வேண்டியவை அனைத்தும் அடங்கியது**

• 8 நாடுகளில் உள்ளூர் உணவு வகைகளின் தேர்வு • இரவில் 3வது கட்ட ஈஃபில் டவர் • யங் ஃப்ராய் நகரில் ஷாம்பேன் லஞ்ச் • சிஸ்டின் தொழுமிடம் மற்றும் வழிகாட்டியுடன் வாடிகன் நகர சுற்றுப்பயணம் • மவுண்ட் டிட்லிஸ் மற்றும் ட்ரம்மல்பாக் நீர் வீழ்ச்சி • ஹாலந்தில் மெடுரோ டேம் மற்றும் க்யுகோனாஃப் • யூரோ டிஸ்னியில் ஒரு நாள் முழுதும் • பாரிஸ் மாநகரில் காலா டின்னர் குரூஸ் • லண்டனில் மேடம் துஸாடின் மெழுகு அருங்காட்சியகம் (வேக்ஸ் மியூஸியம்), சேஞ்சிங் ஆஃப் த கார்ட்ஸ், 'லண்டன் ஐ மற்றும் சுவாமி நாராயண் மந்திர் • ரோம் நகரில் வரவேற்பதற்கு வெல்கம் டின்னர்

| அனைத்தும் உட்பட்ட கட்டணம் | |
|---|---|
| டிக்கெட் வரிகள் | ✓ |
| ஸ்விட்சர்லாந்தில் கண்டுகளிக்க வேண்டிய இடங்கள் | ✓ |
| விசா செலவுகள் (யூகே தவிர) மற்றும் காப்பீடு | ✓ |
| ஐரோப்பாவில் அனைத்து உணவுகள் | ✓ |
| யூரோஸ்டார் கட்டணம் | ✓ |



**இதர உல்லாசப் பயணங்கள் :**
**ஐரோப்பா - கட்டணம் ரூ.89,990 முதல் ஆரம்பம்**

- **யூரோப்பியன் பார்கெய்ன் - 10 நாட்கள்**
  லண்டன், பெல்ஜியம், ஹாலந்து, ஜெர்மனி, ஆஸ்திரியா, ஸ்விட்சர்லாந்து, பிரான்ஸ்
- **ஹால் மார்க்ஸ் ஆஃப் யூரோப் - 20 நாட்கள் (துபாய் உடன்)**
  பிரான்ஸ், மொனேகோ, இத்தாலி, வாடிகன், ஆஸ்திரியா, லைச்டென்ஸ்டெய்ன், ஸ்விட்சர்லாந்து, ஜெர்மனி, பெல்ஜியம், ஹாலந்து, லண்டன், துபாய்
- **ஸ்கேண்டிக் ஈஸ்ட் யூரோப் - 16 நாட்கள்**
  ஃபின்லாந்து, சுவீடன், நார்வே, டென்மார்க், ஜெர்மனி, செக் ரிபப்ளிக், ஆஸ்திரியா
- **பெஸ்ட் ஆஃப் யூரோப் - 13 நாட்கள் (துபாய் உடன்)**
  ஸ்விட்சர்லாந்து, ஜெர்மனி, பெல்ஜியம், ஹாலந்து, பிரான்ஸ், லண்டன், துபாய்
- **சுவிஸ் டிலைட்ஸ் - 09 நாட்கள் (துபாய் உடன்)**
  ஜுரிச், லூசெர்ன், பெர்னே, ஜெனீவா, துபாய்

மேற்கண்ட அனைத்து பேக்கேஜ்களும் துபாய் இல்லாமலும் கிடைக்கின்றன மற்றும் யூரோப்பியன் எக்ஸ்ட்ரா வேகன்ஸா பேக்கேஜில் 3 நாட்களுடன் கூட கிடைக்கிறது

**அமெரிக்கா ஆஸ்திரேலியாவிற்கான கவர்ச்சிமிகு பேக்கேஜ்கள்.**
**அமெரிக்கா - கட்டணங்கள் ரூ.1, 58, 645 முதல் ஆரம்பம்**
**ஆஸ்திரேலியா - கட்டணங்கள் ரூ.1,14,136 முதல் ஆரம்பம்**

www.thomascook.co.in

நிறைவான பயணம். நேர்மையான கட்டணம்.

Thomas Cook

Just dial 1939 in Del, Mum, Che, Blr, Hyd or (022) 2529 7777 (8 am to 8 pm, 365 days a year) E-mail us at holidays@in.thomascook.com

CALL THOMAS COOK •CHENNAI ►Tel: 2822 3504/05, 2831 1088, 5213 9002, 2820 2610. •MUMBAI ►Fort, Tel: 2204 8556-58. ..Chembur, Tel: 2529 1155/66. •BANGALORE ►Tel: 5132 9071-74. •DELHI ►Tel: 2341 6585/8572/5571/5848. •HYDERABAD ►Tel: 5566 1103/06/08/09. CALL OUR PREFERRED SALES AGENTS, OR SPEAK TO YOUR TRAVEL AGENT. •CHENNAI ►Pegasus Travels & Tours Tel: 2819 1613/0265/3667, 2440 1526-28, 5214 7057. ..Mount Road ►Travel Air (Madras) Ltd Tel: 2852 3095/5012/1623. ..Park Town ►Maharaja Tourism Development Pvt Ltd. Tel: 2534 3351/5588, 2535 1303/0076/3268/0216. •MADURAI ►Travelok (P) Ltd Tel: 233 8343/2042/6334. •PONDICHERRY ►Chetak Travels Tel: 233 2615, 234 2967/68. •SALEM ►Elite Travels (P) Ltd Tel: 243 1891/92.

HOLIDAYS • CORPORATE TRAVEL • TRAVEL INSURANCE • FOREIGN EXCHANGE

Prices are ex-Chennai per person on a twin-sharing basis. American holiday prices include cost of internal tickets (VUSA) and 4 days' Bahamas Cruise with port charges and gratuities. Prices valid for Indian residents travelling under the BTQ Scheme and subject to RBI regulations. Prices to be paid partly in INR and partly in foreign exchange. Prices calculated are with conversion rate as: 1 Euro = INR 58, 1 USD = INR 45 and 1 AUD = INR 34. Foreign exchange rates will be calculated at the rate on the date of booking. For details, terms & conditions, refer to our colour brochure or call us.

NETWORK TC255A-04 Che Tom



# பரீட்சை

பரீட்சை நாட்கள். உடலை இலகுவாகவும், சக்தி கொண்டதாகவும் வைத்துக் கொள்ள வேண்டிய நாட்கள். அதற்கு உரிய உணவைத் தேர்ந்தெடுப்பதல்லவா புத்திசாலித்தனம்?

சென்னை மகளிர் கிறிஸ்தவக் கல்லூரியின் மனையியல் துறையில் பணிபுரியும் சத்துணவு நிபுணர் கோமதி சிவாஜி, குழந்தைகள் பரீட்சைக்குச் செல்லும் நாட்களில் கீழ்கண்ட உணவுகளைப் பரிந்துரைக்கிறார்.



**காலை:**

ஒரு நாளைக்குக் குறைந்தது 500 மில்லிலிட்டர் பாலாவது கட்டாயம் குடிக்க வேண்டும். காலை எழுந்தவுடன் முக்கால் தம்ளர் பால் குடிக்க வேண்டும். வெறும் பாலைக் குடிக்கப் பிரியப்படவில்லை என்றால் பூஸ்ட், மைலோ போன்ற ஏதாவது சத்துபானத்தையோ, பாதாம் போன்ற ஃப்ளேவரையோ பாலில் கலந்து குடிக்கலாம். ரோஸ்மில்க் என்றாலும் பரவாயில்லை. காபி, டீ ஆகியவற்றைத் தவிர்த்து விடுவதே நல்லது.

**காலை உணவு**

வீட்டில் சத்து மாவு இருந்தால் அதில் கஞ்சி செய்து ஒரு தம்ளர் குடிக்கலாம். ஓட்ஸ் கஞ்சி நார்ச்சத்தும் கொண்டதாக இருப்பதால் மேலும் நல்லது.

தோசை, பூரி போன்ற ஹெவியான மற்றும் எண்ணெய்



சேர்ந்த சிற்றுண்டிகள் வேண்டாம். இட்லி அல்லது கிச்சடி என்றால் ஓகே. இங்கே கிச்சடி என்று நான் கூறுவது பொங்கல் போல பருப்பும் காய்கறிகளும் சேர்ந்து தயாராகுமே, அந்தக் கிச்சடியை.

ஏதாவது பழம் சாப்பிடலாம். அல்லது பழச்சாறு என்றாலும் பரவாயில்லை. வெள்ளரி, தர்பூஸ் போன்றவற்றைக்கூட பழத்திற்கு பதில் சாப்பிடலாம்.

# டயட்!

**காலை உணவுக்கும் மதிய உணவுக்கும் இடையே**

இந்த வேளையில் பசித்தால் மோர், லஸ்ஸி அல்லது பாலை அடிப்படையாகக் கொண்ட எந்த பானமும் குடிக்கலாம்.

**மதிய உணவு:**

வயிற்றை ஒரேயடியாக அடைக்கும்படியான ஹெவியான ஐட்டங்கள் வேண்டாம். காய்கறி கூட்டு கலந்த 'தால்' அரிசி, மற்றும் தயிர் சாதம் போதும். எந்தக் காரணத்தை முன்னிட்டும் எண்ணெயில் பொரித்த உணவு வகை வேண்டாம். தலைசுற்றல், வயிற்றுப் பிரட்டல் ஆகியவை உண்டாகலாம்.



**மாலை வேளை**

மதிய உணவு சாப்பிட்ட ஓரிரு மணி நேரத்திலேயே ஏதாவது கொறிக்க வேண்டும் போல் தோன்றலாம். அப்போது பிஸ்கட் சாப்பிடலாம். சுண்டல் செய்து கொடுக்கலாம். பயத்தம் பருப்பு அல்லது காராமணி சுண்டல் நல்லது. பொரியுடன் பட்டாணி, உப்புக்கடலை ஆகியவற்றைக் கலந்தும் சாப்பிடலாம். சிக்கி எனப்படும் வேர்க்கடலை உருண்டை, எள்ளு உருண்டை சாப்பிட்டால் நிறைய சக்தி கிடைக்கும். சாண்ட்விச் சாப்பிடுவதிலும் தவறில்லை. அப்போது ரொட்டித் துண்டுகளுக்கு நடுவே முளைப்பயிறு, சீஸ்,



• கோமதி



காய்கறி வைத்துச் சாப்பிடலாம்.

**இரவு:**

சப்பாத்தி அல்லது ப்ரெட். இங்கே ப்ரெட் என்று குறிப்பிடுவது மைதா மாவு ரொட்டி அல்ல, 'ஹோல் வீட் ப்ரெட்' என்று பேக்கரிகளில் விற்பதைத் தான்.

ஃப்ரெஷ்ஷான பனீர் கறி, அல்லது முட்டைக்கறி சாப்பிடலாம். முட்டையை கறி, ஆம்லெட் போன்ற எந்த வடிவத்திலும் உட்கொள்ளலாம்.

**சாப்பாடு பிடிக்காதவர்களுக்கு**

சிலருக்குத் தேர்வு சமயத்தில் சாப்பிடப் பிடிக்காது. சாப்பிட்டாலும் வாந்தி வருவது போல இருக்கும். அதற்காக பட்டினி கிடந்தால், உடல் சோர்வடையும். இப்படிப்பட்டவர்கள் முந்திரி, பிஸ்தா போன்ற பருப்புகளில் ஏழெட்டைச் சாப்பிடலாம். பேரிச்சை போன்ற உலர்ந்த பழங்களையும் உட்கொள்ளலாம். இவற்றால் சக்தியும் கிடைக்கும், புரதச்சத்தும் சேரும்.

லஸ்ஸி (இனிப்பு அல்லது உப்பு) குடிப்பதும் நல்லதுதான்.

**பொதுவாக**

பூரணம் வைத்த கொழுக்கட்டை, மில்க் ஷேக் ஆகியவற்றை அளிக்கலாம். பருப்புப் பாயசம்கூட நல்ல சாய்ஸ் தான். ஆனால் வடை, பஜ்ஜி போன்றவற்றை, தேர்வு முடிந்த பிறகுதான் என்று ஒதுக்கி வைத்து விடுங்கள்.

பொதுவாகவே குறைந்த கொழுப்புச் சத்தும், அதிக சக்தியும் கொண்ட உணவு வகையையே பரீட்சை சமயத்தில் உட்கொள்ள வேண்டும்.

எந்த வேளையும் சாப்பிடாமல் இருக்கக் கூடாது. வீட்டுச் சாப்பாடு தான் எப்போதுமே நல்லது. வெளியில் சாப்பிடுவதைத் தவிர்க்க வேண்டும்.

**- ஜி.எஸ்.எஸ்.**

படம்: **ஸ்ரீஹரி**



"அரசரின் சந்தேகத்தைத் தீர்ப்பவருக்கு 800 பொற்காசுகள் பரிசு!"

"ஏன் வழக்கமா தரும் ஆயிரத்தை எண்ணூறா குறைச்சிட்டாங்க?"

"சேவை வரி பிடிச்சது போக பாக்கியைத் தராங்களாம்!"

- பம்மல் நாகராஜன்

"திருடர்களை வரிசையாக நிறுத்தி அலிபாபா என்ன செய்கிறான்...?"

'அட்டெண்டன்ஸ் எடுக்கிறான்..."

"எதுக்கு?"

"அப்ரூவரா மாறினது யாருன்னு கண்டுபிடிக்கவாம்!"

- எஸ். மோகன்





# கோபிகாவின் புதிய ஃபார்முலா!

பிறந்து வளர்ந்த திருச்சூருக்கு டாட்டா பை பை எல்லாம் சொல்லிவிட்டு, தமிழ்ப் படங்களிலும் தமிழ்நாட்டிலும் வளைய வளைய வந்து கொண்டிருக்கிறார் கோபிகா. கர்லி என்கிற திருநாமத்தை தமிழ் சினிமாவுக்காக கோபிகா என்று மாற்றிக் கொண்டவரின் படிப்புத் தகுதி - சமூகவியலில் பட்டப்படிப்பு.

"படித்த படிப்புக்கும் நடிப்புலகுக்கும் முடிச்சுப் போட முடியுமா?" என்று கேட்டோம். "சமூகவியல் என்றாலே சமூகத்தை அறிந்து கொள்வதுதான். என்னதான் சினிமா கிளாமரான ஃபீல்ட் என்றாலும் கண்ணியமாக நடிப்பதுதான் நம் சமூகத்துக்கு ஏற்ற விஷயம். இதைப் பின்பற்றினாலே என் படிப்புக்கு நடிப்பினால் நான் அளிக்கும் மரியாதையாகும்!" என்று பொறுப்பாக பதிலைத் தந்தார் கோபிகா.

ம்... சமூகவியலை பிட் எல்லாம் அடிக்காமல் பாஸ் செய்திருப்பார் போல.

- செந்தில்

அட்டைப்படம்: ப்ரவீண்குமார்

ஸ்டில்ஸ்: 'கனா கண்டேன்'






# மரக்கிளையும் மரபுகளும்!

சட்டமன்றம் நடைபெறுகிறபோது, அரசு ஏதேனும் முக்கியமான அறிவிப்புச் செய்ய வேண்டுமானால், அதை சபாநாயகர் அனுமதி பெற்று, 110வது பிரிவின் கீழ் செய்யலாம் என்பது விதிமுறை. ஆனால், இந்த அறிக்கை விடப்படும்போது தனி நபர் தாக்குதல் இருக்கக் கூடாது, கொள்கை அளவிலான அறிவிப்பாக மட்டுமே அது இருக்க வேண்டும் என்பது மரபு.

'சென்னை நகரின் அழகைக் குலைப்பது போல மரங்களையோ மரக் கிளைகளையோ வெட்ட அனுமதிக்க மாட்டோம். அப்படி வெட்டினால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்' என்று கூறி முதல்வர் நிறுத்தியிருந்தால் பிரச்னை இல்லை. ஆனால் "ஆர்க்காடு வீராசாமியின் சகோதரர் வெட்டினார்" என்று கூறியதுடன், "இப்போதே இவ்வளவு துணிச்சல் என்றால், ஆர்க்காடு வீராசாமி அமைச்சராக இருந்தபோது என்னதான் செய்திருக்க மாட்டார்?" என்றெல்லாம் பேசியது, மரபு மீறிய செயலாகும். அப்படி மரபை மீறிய பிறகு, அந்தத் தனி நபர் தாக்குதலுக்கு பதிலளிக்கவும் சபாநாயகர் வாய்ப்பளிக்கவில்லை. அப்போது விதிமுறைகளைச் சுட்டிக்காட்டி, வாய்ப்பூட்டு போட்டுவிட்டார்! இதனால்தான் பிரச்னை வெடித்தது.

ஆர்க்காடு வீராசாமியின் அண்ணனோ தம்பியோ, முன் அனுமதி பெறாமல் மரக் கிளைகளை வெட்டியது குற்றம்தான்.



கல்கி



2005 மார்ச் 20
தாரண பங்குனி 7
மலர் : 63
இதழ் : 34




ஆனால், அது சட்டசபையில் எழுப்பப்படவேண்டிய அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல. கிளை வெட்டுதலில் பலர் அடிக்கடி ஈடுபடுகிறார்கள். போலீஸார் இதற்கு வழக்கு பதிவு செய்வதும் சகஜமாக உள்ளது. 110வது விதியின் கீழ் சட்டமன்றத்தில் விவரிக்கப்பட வேண்டிய அளவுக்குப் பெரிய பிரச்னை அல்ல இது.

முன்னாள் தி.மு.க அமைச்சரின் தம்பி என்பதால் இந்த கிளை வெட்டும் குற்றத்துக்கு, இல்லாத முக்கியத்துவத்தை அளித்து, பெரிது படுத்த முயன்றிருக்கிறார் முதல்வர்.

மரபுப்படி, சபாநாயகர் எக் கட்சியைச் சேர்ந்தவராயிருந்தாலும் நடுநிலையோடு செயல்பட்டு, அவையை நெறிப்படுத்த வேண்டும். ஆனால், அப்படிப்பட்ட அவைத் தலைவரைத் தமிழகம் கண்டு வெகு காலம் ஆகிவிட்டது.

துரைமுருகனின் சில ஆட்சேபகரமான விமர்சனங்களை அவைக் குறிப்பிலிருந்து காளிமுத்து நீக்கினால்கூட, தமிழக முதல்வர் குறுக்கிட்டு, "அவ்வாறு நீக்க வேண்டாம்; அந்த வார்த்தைகள் அவைக் குறிப்பில் இருந்தால்தான் தி.மு.கவின் வண்டவாளம் உலகுக்குத் தெரிய வரும்" என்று சொல்கிறார்! உடனே காளிமுத்துவும் அவைக் குறிப்பிலிருந்து நீக்கியதை மீண்டும் குறிப்பில் இடம் பெறச் செய்கிறார்!

ஆகக்கூடி, சட்டமன்றம் என்பது, மாநிலத்தின் நிர்வாகம் குறித்த பிரச்னைகளை விவாதித்து நல்லவிதமான முடிவுகளுக்கு வரும் இடம் என்பதுபோய், எதிர்கட்சியினரின் வண்டவாளத்தை அரங்கேற்றுவதற்கான அரங்கமாகிவிட்டது! இந்த 'நெகடிவ்' அணுகுமுறையில் எந்தக் கட்சியும் சளைப்பதாகத் தெரியவில்லை.

ஜெயலலிதாதான் கிளை வெட்டும் விவகாரத்தை 110வது விதியின் கீழ் கொண்டு வந்தாரெனில், அதனைக் கண்டு சிரித்து விட்டுப் போகாமல், சிலிர்த்து சினந்து எழுந்தது தி.மு.க. விவாதிக்க முடியாத விஷயத்தை விவாதிக்க வேண்டும் என்று விதிமுறைகளை மீறி அடம் பிடித்தது. அனுமதி மறுக்கப்பட, ரகளை செய்தது. இதுதான் சாக்கு என்று அவர்களை உடனே வெளியேற்ற உத்தரவிட்டார் காளிமுத்து. வெளியேற மறுத்து




அவைக்குள்ளேயே படுத்துக்கொண்டு தி.மு.க உறுப்பினர் வேலு அடம் பிடிக்க, 'அவரைத் தூக்கி வெளியே போட்டார்கள்' காவலர்கள்... இப்படியே ஒரு அற்ப விஷயம் அனாவசியமாகப் பெரிதாகிப் போய், எதிர்கட்சியினரின் தர்ணா; கோட்டை எதிரில் கூட்டமில்லாததால், பொதுமக்கள் அறிய மவுண்ட் ரோடில் மறியல் என்று சிறுபிள்ளைத்தனமாக வளர்ந்து, கடைசியில் தி.மு.க தலைவரின் வருகையால் பரபரப்பு அடைந்து, போலீஸ் வேனில் ஏற்றிச் செல்லப்படுவதில் முடிந்தது.

நிகர விளைவு...? அன்றைய தினம் (9.3.05) சட்டசபையில் உருப்படியாக எந்த விவாதமும் நடைபெறவில்லை. பட்ஜெட் குறித்த முக்கியப் பிரச்னைகளை எழுப்ப ஒரு வாய்ப்பு பறி போயிற்று. மக்களின் வியர்வையில் விளையும் வரிப்பணம், அரசியல்வாதிகளின் அசட்டுப் பிடிவாதங்களாலும், அடாவடித்தனத்தாலும் சுளையாக வீணாயிற்று.

இந்த விரயத்துக்காக யாரும், எந்த சட்டமன்ற உறுப்பினர் மீதும் நடவடிக்கை எடுக்க முடியாது. அத்தனை பேரும் சட்டமன்ற உறுப்பினர்களுக்கே உரிய சிறப்பு உரிமைகளின் கீழ் பாதுகாப்புத் தேடிக் கொள்ள முடியும். வரி செலுத்தி வோட்டுப் போடும் மக்களுக்கு அவர்கள் எவ்விதத்திலும் பதில் சொல்லத் தேவையில்லை!

சட்டமன்ற உறுப்பினர்களின் சிறப்புரிமைகளுக்கும் மரபு ரீதியான முக்கியத்துவம் இருக்கிறது. அவைக்குள் எவ்விஷயம் குறித்தும் தீர அலசவும், காரசாரமாக விவாதிக்கவும் ஏற்ற சூழலை உருவாக்கித் தரவே, இச் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. இவற்றையும் சரி, சட்டமன்ற விதிகளையும் சரி, தனி நபர் தாக்குதலுக்கும், அரசியல் ரீதியான கணக்குகளைத் தீர்த்துக் கொள்வதற்கும் பயன்படுத்துவது, ஜனநாயக மரபுகளுக்கும் சட்டமன்ற மரபுகளுக்கும் விரோதமான செயல்.

தமிழக சட்டசபையில் மரபுக்கும் மதிப்பில்லை; விதிகளுக்கும் மதிப்பில்லை. இத்தகைய போக்கினால் மக்களிடையே நாமும் மதிப்பிழந்து வருகிறோம் என்பதை அரசியல்வாதிகள் உணர்வது நல்லது.

# ராம்

தமிழ் சினிமாவின் வர்த்தகக் கோட்பாடுகளுக்குக் 'கட்டுப்படாமல் மீண்டும் ஒரு நிஜக் கதைநாயகன். மறந்தும் கூட இவரிடம் ஒரு 'பன்ச்' டயலாக்கை நீங்கள் எதிர்பார்க்க முடியாது. மாறாக மாணிக்க வாசகரின் திருச்சதகத்தை மனமுருகப் பாடி பிரார்த்தனை செய்கிறவன். அதுவும் வீட்டுக் கூரையின் புகைபோக்கி மீது ஒற்றைக்காலில் நின்று கொண்டு, கரங்களைத் தலைக்குமேலே கூப்பி, ராம் என்கிற இருபது வயது ராமகிருஷ்ணன் ''வானாகி... மண்ணாகி, வளியாகி... ஒளியாகி'' என்று உச்சரிக்கிறபோது, நமக்குள் அதிர்வுகள் பரவுகின்றன.



தாய், ஒரு தலையாய் விரும்பும் காதலி, இருவரையும் தவிர பயிலும் பள்ளியில் தொடங்கி அக்கம் பக்கத்தினர்வரை, ராமைக் கொஞ்சம் மனநிலை சரியில்லாதவன் என்று நம்புகிறார்கள். அவனைப் பரிசோதிக்கும் மனநல மருத்துவரும் கூட "ஆள் கொஞ்சம் ஆட்டிஸ்டிக் போர்வழி" என்கிறார். உண்மையில் ராம் ஒரு நிறை மனிதன். குறை மனிதர்களோ வெளியே இயல்பும், உள்ளே மிருகமும் உறுமும் அலைகிறார்கள் என்பதை ஒரு கொலைக் குற்றத்தைத் துப்பறியும் பின்னணியில், பார்வையாளனின் ரத்தம் சில்லிட்டுப் போகும் சங்கிலித் தொடர் சஸ்பென்ஸ்களோடு சொல்லியிருக்கிறார், 'மௌனம் பேசியதே' அமீர். இதற்கு அவர் ஊடகமாக வடிவமைத்த திரைக்கதை வடிவத்தை, காலம் சென்ற ஆல்பிரெட் ஹிச்காக் பார்த்தால் "கீப் இட் அப்" என்று பாராட்டக் கூடும். கதாநாயகன் வளர்ந்த ஆன்மிகம் மற்றும் மெல்லிய அமானுஷ்யப் பின்னணியை மனோஜ் நைட் ஷ்யாமளன் பார்த்தால், பாராட்டும் வாய்ப்புகள் அதிகம்.

நமது பங்குக்கு ஆறு விஷயங்களுக்காக அமீரைப் பாராட்டுவோம்..

1. பார்வையாளனுக்கு பரிச்சயமுள்ள நடிகர்களைப் பயன்படுத்திய போதும், அவர்களைப் பாத்திரங்களாகத் தெரியும்படி அழுத்தமாக வார்த்திருப்பது. 2. காதல் இருந்தும் அதையே பிடித்துத் தொங்காதது. 3. 'டூயட்'டோ, கவர்ச்சி நடனமோ வலியப் புகுத்தாதது. 4. இஸ்லாமிய சமுதாயத்தில் பிறந்து, வளர்ந்த இயக்குனர், இந்துமத சாரத்தை பெருமைப் படுத்தும் விதமாகக் காட்டுவது. 5. படத்தின் முடிவை சூரசம்ஹாரமாக்கி விடாமல் ராம் பாத்திரப் படைப்பை காப்பாற்றுவது 6. சொந்தப் பணத்தில் இப்படியொரு முயற்சியைச் செய்திருப்பது. நிற்க; இத்தனை திறமையான இயக்குனர், மருந்துக்கும் கவித்துவமே இல்லாத சினேகனின் வெற்று உரைநடைகளை பாடல்களாகப் பயன்படுத்திக் கொண்டிருப்பது, ஏமாற்றம் அளிக்கின்றது. இருந்தும், ராம் அழுகிய ரசனைக்கு அற்புத மருந்து.

- விஷுவல்தாசன்

○ ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ் ○ ஆவரெஜ் ○ அபவ் ஆவரெஜ் ● டிஸ்டிங்ஷன்



என்னோட தீவிர ரசிகைஸ்ல ஒருத்தர் புவனகிரி ஹேமா... அவ எனக்கு லெட்டர் போட்டு என்ன கேட்டா தெரியுமோ! அவ கொழந்த சாப்பிடறதுக்கு அடம் பிடிக்கறதாம். கேட்டா, பசியில்லைன்னு பதில் சொல்றாளாம். பசியெடுக்கறதுக்கு ஒரு சூப்பர் ஐட்டம் சொல்லுங்கோ மாமின்னா! இந்த வாரம் 'சீஸ் பேல்'னு ஒரு ஐட்டத்தை சொல்லித்தரப் போறேன். இதை பிரிப்பேர் பண்ண நான் யூஸ் பண்ணின ஐட்டம்ஸை ஒவ்வொண்ணாச் சொல்றேன்... கவனமா நோட் பண்ணிக்கோங்கோ.

# வெண்ணெய் பேல்!

ரெண்டு கப் அரிசிப் பொரி (பஃப்டு ரைஸ்னு இங்கிலீஷ்ல சொல்வா!) ஒரு டீஸ்பூன் ஆயில், ரெண்டு பச்சை மிளகாய், பொடியா நறுக்கின கறிவேப்பிலை இரண்டு டேபிள் ஸ்பூன், அரை கப் காரா சேவ், அரை கப் வறுகடலை, ஒரு டேபிள் ஸ்பூன் மேங்கோ பவுடர், அரை டீஸ்பூன் கறுப்பு உப்பு, நாலு டேபிள் ஸ்பூன் சீஸ் பவுடர்... அத்தோட மீடியம் சைஸ்ல ஒரு வெங்காயத்தை எடுத்து பொடியா நறுக்கிக்கோங்கோ. அதேபோல ஒரு தக்காளியையும் பொடியா நறுக்கிடுங்கோ. அப்புறம் டேஸ்டுக்கு ஏத்த மாதிரி கொஞ்சூண்டு உப்பு, கொஞ்சூண்டு மிளகாய்த் தூள், அவ்ளோதான்!

முதல்ல ஒரு கடாய்ல ஆயிலை விட்டு காய விட்டு, அதன் மேல பொரியைக் கலந்து ஒரு நிமிஷத்துக்குத் தொடர்ச்சியா வறுத்துடுங்கோ... இப்போ நான் மேல சொன்னேனோல்யோ, அந்த ஐட்டம்ஸ்ல சீஸ் பவுடரைத் தவிர மத்த எல்லாத்தையும் பொரியோட மிக்ஸ் பண்ணி வறுத்துண்டே இருங்கோ... இப்போ கடாயை அடுப்பில் இருந்து எடுத்து, அதன் மேல் சீஸ் பவுடரை மேலோட்டமா தூவி விட்டேள்னா 'சீஸ்பேல்' அமர்க்களமா ரெடி! இதைச் சாப்பிட்டுட்டு, உங்க குழந்தேள்லாம் பசி பசின்னு உங்களை நச்சரிக்கப் போறது நிச்சயம்! வரட்டுமா!

**மைக்ரோவேவ் மாமி**



# வழிகாட்டும் வேடந்தாங்கல்!

**மாவட்ட வேலைவாய்ப்பு அலுவலகத்தை, கல்வி பயில்வோர் மற்றும் வேலை நாடுவோர் என அனைவருக்கும் இனிய வேடந்தாங்கலாக மாற்றியமைத்தவர், திருச்சி மாவட்ட வேலைவாய்ப்பு அலுவலக உதவி இயக்குனர் ப.சுரேஷ்குமார். அவர் தரும் பயனுள்ள டிப்ஸ்!**

**கடலியல் விஞ்ஞானம் :**

கடல் சார்ந்த இயற்கைச் சூழல் மற்றும் துருவங்களில் உள்ள பனிக்கட்டியுடன் கூடிய கழிவுகள் முதல், அமைதியான கடலுடன் தொடர்புடைய ஆழமில்லாத ஏரி, அதாவது பவழப் பாறைகளை உள்ளடக்கிய பகுதிகள் வரை முழுமையாக அறிந்து கொள்ளும் படிப்பு.

எம்.எஸ்.சி. அல்லது இப்பிரிவில் தொழில் நுட்பத் தகுதி மேலும் பி.ஹெச்டி. பட்டம் பெற்றவர்களுக்கு, இப்படிப்பில் சேர பெரும்பாலும் வாய்ப்புகள் அதிகம். ஜியாலஜிக்கல் ஓஷோனோகிராபி, மெரைன் பயாலஜி, ஃபிசிக்கல் ஓஷோனோகிராபி போன்ற பிரிவுகள் இப்படிப்பில் அடங்கும்.

● ஐ.ஐ.டி., சென்னை ● இன்ஸ்ட்டிடியூட் ஆப் டெக்னாலஜி, மும்பை ● கொச்சின் தொழில் நுட்பப் பல்கலைக் கழகம், கொச்சின் ● நேஷனல் இன்ஸ்ட்டிடியூட் ஆப் ஓஷனோகிராபி, கோவா

மேலும் சில கல்வி நிலையங்களிலும் கடலியல் விஞ்ஞானப் பட்டப் படிப்புகள் நடத்தப்படுகின்றன.

**மேலாண்மைப் படிப்புகள் :**

(வேலை வாய்ப்பளிக்கும் விருப்பப் பாடங்களை உள்ளடக்கியது)

திட்டங்களை கால அவகாசத்திற்குள் செயல்படுத்தும் திறன், குழுவை நடத்தும் பாங்கு, உடன் பணிபுரிவோரை ஊக்கப்படுத்துதல், வாடிக்கையாளரை திறமையாகக் கையாளும் திறன், மேலதிகாரிகளுடன் சுமுக உறவுடன் பணியாற்றுதல், போட்டியாளர்களை எதிர்கொள்ளுதல் போன்ற பன்முகத் திறனை உள்ளடக்கியது, மேலாண்மைப் படிப்பு.

இப்போதுள்ள வேலைச் சூழலில் மேலாண்மைக் கல்வி பயின்று வெளி வருபவர்கள், உடனே மேலாளர்களாகச் செயல்பட வேண்டும் என்றே பல நிறுவனங்கள் எதிர்பார்க்கின்றன. பயிற்சியாளர்களாகச் சேர்ந்து பின்னர் பணியில் ஈடுபடுவதற்கு உண்டாகும் கால தாமதத்தை, நிறுவனங்கள் பொறுத்துக் கொள்ளும் நிலை அரிதாகி வருகிறது.

● பி.ஐ.எம். எனப்படும் பாரதிதாசன் இன்ஸ்ட்டியூட் ஆப் மேனேஜ்மென்ட், திருச்சிராப்பள்ளி

● எக்ஸ்.எல்.ஆர்.ஐ. ஜாம்ஷெட்பூர் ● ஐ.ஐ.எம். அகமதாபாத் - கல்கத்தா - பெங்களூர் கோழிக்கோடு - லக்னோ ● சிம்பயாசிஸ், புனே. அமிட்டி பிசினெஸ் ஸ்கூல், நொய்டா

• சுரேஷ்குமாருடன் மாணவர்கள்...



**தொலை புலனுணர்வு :**

(REMOTE SENSING)

ஒரு நிலப்பகுதி பற்றி, ஒரு பொருளைப் பற்றி, புலன்களுக்குத் தோன்றும் காட்சி பற்றிய தகவல்கள் போன்றவற்றை, தொலைவுப் புலனுணர்வு மூலம் சேகரிப்பது. இயற்கை வளங்களைக் கணிக்க, எர்த் ரிசோர்சஸ் டெக்னாலஜி சாட்டிலைட் மூலம் 1972ல் ரிமோட் சென்ஸிங் பயன்படுத்தப்பட்டது.

புவியியல், ஜியாலஜி, எஞ்சினியரிங், விவசாயம், காடுகள் பராமரிப்பு, உயிர் விஞ்ஞானம், சுற்றுப்புற விஞ்ஞானம், கணினி பயின்றவர்கள் இந்தப் படிப்பை மேற்கொள்ளலாம். இதரப் பிரிவுகளில் படித்தவர்களும் முதுநிலைப் பட்டப்படிப்பு, டிப்ளமோ படிப்பு போன்றவற்றை,

ரிமோட் சென்சிங் மற்றும் ஜி.ஐ.எஸ். படிப்பாகப் பயிலலாம். எம்டெக். படிக்க எந்த ஒரு முதுநிலைப் பட்டப் படிப்பாக இருந்தாலும், அதில் சிறப்புப் பாடமாக ரிமோட் சென்சிங் மற்றும் ஜி.ஐ.எஸ். பயில்வது பயனளிக்கும்.



- ஆந்திர பல்கலைக் கழகம்
- விசாகப்பட்டினம்
- அண்ணா பல்கலைக்கழகம், சென்னை



- ஜவஹர்லால் நேரு டெக்னாலஜி பல்கலைக் கழகம், ஹைதராபாத்
- ஐ.ஐ.டி., ரூர்கி மற்றும் மும்பை,

www.gisdevelopment.net
www.spatialnews.com



**மெரைன் எஞ்ஜினியரிங் (மெர்ச்சண்ட் நேவி) :**

உலக மயமாக்கலின் தாராளமயக் கொள்கையின் விளைவாக, இன்றையச் சூழலில் கப்பல் போக்குவரத்து வர்த்தகம் பன்மடங்கு பெருகும் வாய்ப்புகள் உள்ளன.

நேவிகேஷன், இன்ஜினியரிங், ரேடியோ மற்றும் ஒயர்லெஸ் கம்யூனிகேஷன், இதர பணிப்பிரிவுகள் என நான்கு வகையில் மெரைன் இன்ஜினியரிங் படிப்பு அடங்கும்.

- டிஎஸ். சாணக்கியா, மும்பை
- மெரைன் எஞ்ஜினியரிங் ரிசர்ச் இன்ஸ்ட்டிடியூட், கொல்கத்தா
- இன்டர்நேஷனல் மேரிடைம் இன்ஸ்ட்டிடியூட், உத்தரப்பிரதேசம்
- நேஷனல் இன்ஸ்ட்டிடியூட் ஆப் போர்ட் மேனேஜ்மென்ட், சென்னை

**பி.இ., ஃபயர் எஞ்ஜினியரிங் :**

இப்படிப்பை 3 1/2 வருடங்களுக்குப் பயில வேண்டும். (6 மாதங்கள் இந்தியாவின் முக்கிய நகரங்கள் ஏதேனும் ஒன்றில் செய்முறை தியணைப்புப் பயிற்சி வழங்கப் படும்). பி.எஸ்.சி. வேதியில் அல்லது இயற்பியல் படித்திருக்க வேண்டும். இப்படிப்பை மேற்கொள்பவர்கள் செய்முறைப் பயிற்சிக்கு செல்லக் கூடிய உடல் தகுதியைப் பெற்றிருக்க வேண்டும்.

நாக்பூரில் உள்ள இந்தியன் இன்ஸ்ட்டிடியூட் ஆப் ஃபயர் இன்ஜினியரிங், பல்வேறு டிப்ளமோ படிப்புகளை வழங்குகிறது.

- Advanced Diploma in Fire Safety Engineering
- Post Diploma in Fire Engineering

**பயோ இன்ஃபர்மேடிக்ஸ் :**

உயிரியல் தகவல்களை கணினி மேலாண்மை மூலம் ஒருங்கிணைத்து விஞ்ஞான ரீதியான ஆராய்ச்சிகள், முடிவெடுக்கத் தேவையான தகவல்கள் அறிதல், போன்ற அம்சங்களை உள்ளடக்கிய படிப்பே பயோ இன்ஃபர்மேடிக்ஸ். வியாதிகளுக்கான மரபு சார்ந்த காரணங்களை அறிதல், மற்றும் அதற்கான மருந்து தயாரிக்கும் ஆராய்ச்சியில் ஈடுபடுதலும் இப்படிப்பில் அடங்கும்.

- பாரதியார் பல்கலைக்கழகம், கோவை
- மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை
- எம்.எஸ்.ஐ.டி. புரோகிராம், ஹைதராபாத்.

**- ஸ்ரீ ரங்கம் திருநாவுக்கரசு**





# சூப்பர் ஸ்டார்

இன்றையத் தேதிக்கு ஹெல்த் கேர் சர்வீஸஸ் சம்பந்தப்பட்ட எந்தப் படிப்பானாலும், தங்கச் சுரங்கம்தான்! அதிலும் ஹாஸ்பிடல் மேனேஜ்மென்ட்டுக்கு இருக்கும் டிமாண்டே தனி! "படிச்சதும் வேலை" என்ற நிலைமை போய், "படிக்கும்போதே வேலை" என்ற கவர்ச்சியான அம்சம் இருப்பதால், இளைஞர்கள் மொய்க்கிறார்கள்.

சென்னை, மேற்கு அண்ணாநகரில் உள்ள மத்திய அரசின் அங்கிகாரம் பெற்ற எஸ்.ஐ.எஸ்.ஐயின் அங்கமான நீனாஸ் பாலிடெக்னிக்கில், மருத்துவமனை நிர்வாகவியல் பட்டயப்படிப்பு சொல்லித் தரப்படுகிறது.

"ஏதோ நோய் வந்தது, டாக்டரைப் போய்ப் பார்த்தோம். ஊசி போட்டு மருந்து தந்தார்; குணமாகி விட்டது என்பதெல்லாம் மீட்டர்கேஜ் ரயிலேறிப் போயிடுச்சு. இன்றைக்கு எல்லாமே சூப்பர் ஸ்பெஷாலிடி மருத்துவமனைகள். நட்சத்திர ஹோட்டல்கள் போல பல மாடிகளில், பளிங்கும் ஏஸியுமாகப் பளபளக்கின்றன. ஃப்ரன்ட் ஆஃபீஸில் தொடங்கி பில் செட்டிலிங் வரை ஏகப்பட்ட பிரிவுகள். ஒவ்வொரு மருத்துவத்துறைக்கும் வெவ்வேறு விதமான நடைமுறைச் செயல்பாடுகள். உயிர் காக்கும் மருத்துவத் துறை என்பதால், கச்சிதமான நிர்வாகமும், சுகாதாரமான பராமரிப்பும் தேவைப்படுகின்றன. அதனால்தான் மேலை நாடுகளைப் போலவே, இங்கேயும் ஹாஸ்பிடல் மேனேஜ்மென்ட் கல்விக்குப் பிரகாசமான வேலை வாய்ப்புகள் பெருகிவிட்டன" என்கிறார் நீனாஸ் பாலிடெக்னிக்கின் முதல்வர் ரெஹானா.

* ரெஹானா







# மவுசு!

மருத்துவமனை திட்டமிடுதல், நடைமுறை நிர்வாகம், சப்போர்டிவ் சர்வீஸஸ், மெடிக்கல் டெர்மினாலஜி, ஸ்டோர்ஸ், அக்கவுண்ட்ஸ், நிதி நிர்வாகம், ரிக்கார்ட்ஸ் கீப்பிங், கஸ்டமர் சர்வீஸ், மார்க்கெட்டிங், கேன்டீன், ஹவுஸ் கீப்பிங், லாண்டரி சர்வீஸஸ் என எண்ணற்ற பிரிவுகளை உள்ளடக்கிய கல்வித்திட்டம் இருப்பதால், படிக்கும்போதே கேம்பஸ் செலக்ஷன் ஆகி பிரபல மருத்துவமனைகளில் வேலை கிடைத்து விடுகிறது" என்கிறார் ஹாஸ்பிடல் மேனேஜ்மெண்ட் முதுநிலை பட்டயப் படிப்பின் ஆலோசகரான பாலசந்தர்.

வாரத்தில் நான்கு நாள் தியரி, இரண்டு நாள் மருத்துவமனைகளில் களப்பணி என திட்டமிட்ட பயிற்சி தரப்படுகிறது. ப்ளஸ் டூ படிப்பே போதுமானது என்றாலும், பட்டதாரிகளுக்குச் சிறப்பான ஊதியம் கிடைக்க வாய்ப்பிருக்கிறது.

"சுறுசுறுப்பும், சாதுரியம் கொண்ட இளைய வர்க்கத்தினருக்கு ஏற்ற வேலை இது! மெட்ராஸ் மெடிக்கல் மிஷன் ஹாஸ்பிடல், ஹிந்து மிஷன் ஹாஸ்பிடல், சுந்தரம் மெடிக்கல் பவுண்டேஷன், தேஜா மருத்துவமனை போன்ற பெரிய மருத்துவமனைகளுடன் 'டை-அப்' இருப்பதால், பிராஜெக்ட் வேலைகளைச் சிறப்பாகச் செய்ய முடிகிறது" என்கிறார் மாணவி நிஷா கிறிஸ்டி.

"ஒரு வருட டிப்ளமா படிப்புக்கு முப்பத்து இரண்டாயிரம் ரூபாய் கட்டணம் வசூலிக்கிறார்கள். ஆதி திராவிட, பழங்குடியினருக்கு சிறப்புச் சலுகை உண்டு" என்று தகவல் தெரிவித்தார் மாணவி கனிதா ரமேஷ்பாபு.

மருத்துவத்தின் மீது ஈடுபாடு கொண்டவர்கள், டாக்டருக்கும் நர்ஸிங்கும்தான் படிக்க வேண்டும் என்றில்லை. எல்லாவற்றையும் ஒரே குடையின் கீழ் நிர்வகிக்கும் ஹாஸ்பிடல் மேனேஜ்மெண்டையும் படிக்கலாம்.

- சநகன்

படம்: ஸ்ரீஹரி

# கை மேல் வேலை!

**சில வித்தியாசமான வேலை வாய்ப்புகள் தரும் படிப்புகள் பற்றிச் சொல்கிறார் ம. லெனின். தகவல் தொடர்பு இயலில் டாக்டர் பட்டத்துக்குரிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இவர், வேலைவாய்ப்பு மற்றும் கம்ப்யூட்டர் குறித்து, பல நூல்களை எழுதியிருக்கிறார்.**

### பூங்கதவே தாழ் திறவாய்!

இன்று 'பொக்கே' கலாசாரம் பெருகி இருக்கிறது. பல்வேறு நிகழ்ச்சிகளுக்கும், நிறுவன அறைகளுக்கும் மலர், அலங்காரம் செய்வது வழக்கமாகிவிட்டது. மலர் உற்பத்தி, அலங்காரம், மலர்களை பக்குவப்படுத்துவது, ஏற்றுமதி என்று பல்வேறு துறைகளிலும் வேலை வாய்ப்புகள் பெருகி வருகின்றன.

டெல்லி இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையம், காக்டஸ் சொஸைடி ஆஃப் இந்தியா, இந்தியன் கவுன்சில் ஃபார் ஜப்பானீஸ் கல்சர், ரோஸ் சொசைடி ஆஃப் இந்தியா, ஆல் இந்தியா கிச்சன் கார்டன் அசோசியேஷன் ஆகிய நிறுவனங்கள் வேலை வாய்ப்புகளை அளிக்கின்றன.



### மூச்சையடக்க வாரீகளா?

பாதுகாப்பு, மீட்புப்பணி தொடங்கி, நீருக்கடியில் சென்று செய்யும் பணிகள் பல உண்டு. இதற்கான பயிற்சிப் படிப்பை கொச்சியில் இருக்கும் 'டைவிங் ஸ்கூலில்' அளிக்கிறார்கள்.

இதில் சேருவதற்கு பத்தாம் வகுப்பில் நல்ல மார்க் எடுத்தால் போதும். ஆனால், படிப்பை விட முக்கியமானது, உடல் வலிமை. இப்பயிற்சியில் சேருவதற்கான வழிமுறைகள் மிகவும் கடுமையானவை. உடல் ரீதியாகப் பார்த்தால், நீண்ட நேரம், நீண்ட தூரம் நீச்சலடிக்கும் திறமையைப் பெற்றிருக்க வேண்டும். முதற்கட்ட சோதனைக்குப் பின், கொச்சி கடற்படை மருத்துவமனையில் மருத்துவப் சோதனை நடக்கும். ஆறு வார காலப் பயிற்சிக்குப்பின் வேலை வாய்ப்புகள் பிரகாசமாய் உள்ளன.

• ம. லெனின்



### அழகே உன்னை ஆராதிக்கிறேன்...

பி.எஸ்ஸி (ஆயில், சோப்ஸ் மற்றும் டிடர்ஜென்ட்ஸ்) என்று ஸ்பெஷலாக ஒரு பட்டப் படிப்பு இருப்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

பலவகை எண்ணெய்களை அவற்றின் மூலப் பொருள்களிலிருந்து பிரித்து எடுப்பது எப்படி? அவற்றைப் பயன்படுத்தி பல்வேறு வகையான சோப்புகளைத் தயாரிப்பது எப்படி என்று சொல்லித் தருகிறார்கள்.

ஆந்திராவில் உள்ள பிரகாசம் மாவட்டம், சிர்தா என்ற இடத்தில் URS and YRN College of Technologyல் இப்படிப்பு படிக்கலாம்.



### கண்ணாடியில் கலை!

முகம் பார்க்கும் கண்ணாடி முதல், ஆப்டிக் ஃபைபர் கேபிள் வரை, கண்ணாடி ஆட்சி செலுத்தாத இடமே இன்று இல்லை. கண்ணாடியில் செய்யப்பட்ட கலைப் பொருள்களுக்கு இன்றும் உலக அளவில் மவுசு இருக்கிறது. இந்தியாவில் கண்ணாடிப் பொருள்களுக்குப் பெயர் பெற்ற இடம் ஃபெரோஸா பாத். இங்கே மத்திய அரசு, பாரம்பரிய மிக்க கண்ணாடிப் பொருள்கள் செய்யும் கலையை அறிவியல் ரீதியில் கற்றுத் தருவதற்காக, ஒரு பயிற்சி மையத்தை நிறுவியுள்ளது.

உ.பி. மாநிலம் ஃபெரோஸாபாதில் உள்ள சென்டர் ஃபார் தி டெவலப்மென்ட் ஆஃப் கிளாஸ் இன்டஸ்டிரியின் பயிற்சி நிலையத்தில், கண்ணாடி சம்பந்தமான பயற்சிகளைப் பெற பத்தாம் வகுப்பு படித்திருந்தாலே





போதுமானது. ஆறுமாதகாலப் பயிற்சி இது. பரம்பரையாக இத்தொழிலில் ஈடுபடுபவர்களே அதிகம் என்பதால், முறைப்படி பயிற்சி பெற்றவர்களுக்கு, இந்தத் துறையில் எப்போதுமே நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன.

### இணையத்திலும் காக்கி உண்டு!

“காவல்துறையில் சேர உங்களுக்கு விருப்பமா?” என்று கேட்டால், “ஐயோ! எனக்கு தொப்பை இல்லையே! என்னைத் தேர்ந்தெடுப்பார்களா?” என்று கடிக்காதீர்கள். இது இணைய காவலர் வேலை.

ஆங்கிலத்தில் 'Cyber Cop'. இணையக் குற்றங்களைக் கண்டுபிடிக்கிற, குற்றவாளிகளைக் கண்டுபிடித்தபின், சைபர் சட்டங்களின்படி தண்டனை வாங்கித் தருகிற, சைபர் குற்றங்களைத் தடுக்கிற பணி. வருங்காலத்தில் மிகவும் இன்றியமையாத ஒன்றாக இருக்கப் போகிறது. இணையத்தினுள்ளே அத்துமீறி நுழைபவர்களைக் கண்காணிப்பது, சைபர் குற்றவாளிகளிடமிருந்து, இணைய தளங்களைப் பாதுகாப்பது, வைரஸ் தாக்குதல் ஏற்படாதவாறு எச்சரிக்கையோடு இருப்பது, இதெல்லாம் கூட சைபர் காவலர்களின் பணிதான்.

பூனா, டெல்லியில் தரப்படும் பயிற்சியை முடித்தபிறகு, அமெரிக்காவின் 'இணையக் காவலர் பயிற்சித் திட்டத்தின்' கீழ் நடத்தப்படும் தேர்வில் வெற்றி பெற வேண்டும். அதன் அடிப்படையில் கம்ப்யூட்டர் நிறுவனங்களில் வேலைக்குச் சேரலாம். மேலும் விவரங்களுக்கு பூனா சி.பி.ஐ. அலுவலகத்தை அணுகவும்.

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

இந்தியர் ஒருவர், அதுவும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் முதன் முதலாகப் பங்கு பெற்றதால், F1 என்ற பந்தயத்தைப் பற்றி நாட்டிலும், தமிழகத்திலும் ஒரு புது ஆர்வம் தோன்றியுள்ளது. கங்கிராட்ஸ் நாராயன் கார்த்திகேயன்!

டென்னிஸ் விளையாட்டுக்கு விம்பிள்டன் போல், கார் பந்தயத்துக்கு அகில உலகப் புகழ் வாய்ந்த F1ம் ஆண்டுதோறும் நடத்தப்படுகின்றது. ஆனால் ஒரு முக்கிய வித்தியாசம்: ஒரே ஒருமுறை நிகழ்ந்து முடிவதில்லை F1. 17-19 முறை, வேறு ஊர்களில் அதாவது வேறு வேறு தடங்களில் திறமை பரிசோதிக்கப் படுகிறது. இந்த ஆண்டுக்கான முதல் பந்தயம் ஆஸ்திரேலியாவில் மெல்போர்ன் நகரில் நடந்து முடிந்துள்ளது. இரண்டாவது பந்தயம் மலேசியாவில் கோலாலம்பூர் நகரில் களும் முடிந்தபின் இவை கூட்டப்பட்டு உலக சாம்பியன் யார் என்று அறிவிக்கப்படும். ஒரு பந்தயத்தில் வெற்றி பெறுவதன் மூலம் பட்டம் பெற முடியாது! இதே போன்று கார் அமைக்கும் கம்பெனிக்கும் உலக சாம்பியன் விருது உண்டு. மணிக்கு 220 கிலோ மீட்டர் வேகத்தில் கார்கள் தடத்தைச் சுற்றி வந்தாலும், கடக்கும் நேரத்தை துல்லியமாகக் கணக்கிட, நுட்பமான எலெக்டிரானிக் கருவிகள் பொருத்தப்பட்டுள்ளன.

பந்தயத்துக்கு மட்டுமன்றி கார்களுக்கும் கடுமையான விதிமுறைகள் உள்ளன. ஒவ்வொரு காரும் பரிசோதிக்கப்பட்ட பிறகே அனுமதிக்கப்படும். எஞ்ஜின், கியர் போன்ற பாகங்களோடு, டிரைவர் அமரும் இருக்கையும் (அவருக்காக) பிரத்யேகமாக தயாரிக்கப்படுகிறது. ஒவ்வொரு மாடலுக்கும் இரண்டு கார்களை

# விரட்டுது வேகமே! மிரட்டுது மோகமே!

நடைபெற உள்ளது. இந்த வருஷம் மொத்தம் 19 பந்தயங்கள். ஒவ்வொரு பந்தயத்திலும் முதல் 8 இடங்களைப் பிடிப்பவருக்கு பாயிண்டுகள் தரப்படுகின்றன. அனைத்துப் பந்தயங்களும் முடிந்தபின், முதல் 8 இடங்களைப் பிடிப்பவருக்கு பாயிண்டுகள் தரப்படுகின்றன. அனைத்துப் பந்தயங்

இரண்டு டிரைவர்கள் ஒரு பந்தயத்தில் ஓட்டுகின்றனர். கார்த்திகேயனுடன் டீமில் இணைந்தவர் டியாகோ மான்டைரோ (Tiago Monterio) என்ற 28





* நாராயன் கார்த்திகேயன்

வயதான போர்த்துகீசியர். இவர்கள் ஓட்டிய கார் ஜோர்டன் - டொயோடா (Jordan - Toyata). ஜோர்டன், கார் தயாரிப்பாளரின் பெயர்; டொயோடா, என்ஜின் பெயர். இது போலவே ஒவ்வொரு பந்தய வீரருக்கும் பின் வரும் பெயர்கள் தயாரிப்பாளரைக் குறிக்கும்.

ஹோண்டா, மெர்சிடீஸ், ரெனால்ட் முதலிய பிரபல கார் தயாரிப்பாளர் அனைவரும் தங்களுடைய கார்களைக் களம் இறக்குகின்றனர். போட்டியில் வெற்றி பெற்றதால் கிடைக்கும் புகழ் மட்டும் காரணம் இல்லை. பந்தயத்தின் விளைவுகளை ஆராய்வதன் மூலம், கார் பாகங்களை மேலும் சிறப்பாகத் தயாரிக்கலாம் எனக் கருதுகின்றனர். ஏனெனில் F1 பந்தயம் காரின் சக்தி, நம்பகம் இரண்டுக்கும் ஓர் அக்னிப் பரீட்சை.

உலகம் முழுவதும் ரசிகர்கள் பார்க்க விரும்புவதால், டிவிக்கள் ஒளிபரப்பும் உரிமையைப் பெற F1 நடத்தும் அமைப்புக்குப் பணத்தை அள்ளித் தருகின்றனர். கார் பந்தய ஹீரோவுக்குக் கிடைக்கும் வருமானமும் வாயைப் பிளக்கும் வகையில்தான் இருக்கிறது! இன்று முதலாவதாக விளங்கும் ஷூமாகருக்கு ஆண்டு வருமானம் 80 மில்லியன் டாலர்! (35 கோடி ரூபாய்)

**- எஸ். ஸுப்ரமணியன்**





# செய்திகள்

தேவுடா! தேவுடா! 'சூப்பரா' ஒரு 'ஸ்டார்' நியூஸோட, கூத்தை ஆரம்பிக்கவா! சந்திரமுகி சாங்ஸ் சக்கைப்போடு போடுது! (ரசிகர்கள் மத்தியில்!) தலைவரு காசெட் வெளியீட்டு விழாவில, ''நான் விழுந்தா எழுந்திரிக்க முடியாத 'யானை' இல்ல. பாய்ஞ்சு ஓடுற குதிர''ன்னு 'பஞ்ச்' விட்டிருக்காரு. ஆமா 'யானை'ன்னு அரசியல்ல யாரைச் சொல்றாரு? புரியலையே! இதுபோக, சென்னை அண்ணாசாலைல தலைவர் தோள்ல காவித் துண்டு, நெத்தியில காவி நாமம் இருக்கிற மாதிரி 'கட்-அவுட்' ஒண்ணு வைச்சிருக்காங்க. தலைவரு திரும்பி பா.ஜ.கவுக்கு ஆதரவான்னு ரசிகருங்க குழம்பியிருக்காங்களாம். ஏம்பா! தலைவரு மாதிரியே ரசிகர்களும் குழப்பவாதியாத்தான் அலையணுமா! (என்ன, ரஜினி ரசிகர்களெல்லாம் சின்னானை கோபமாப் பாக்கறீங்களா? ஓகே. நான் முன்ஜாமீன் மாதிரி 'முன் பொது மன்னிப்பு' கேட்டுக்கறேன். ஹா... ஹா...ஹா!)

"காங்கிரஸ்காரங்களை முதல்வர் 'வக்கு' இல்லாதவர்கள்னு சொல்லியிருக்காரு. அவரு 'ழ'வை மறந்துட்டாரு. அது 'வக்கு' இல்ல; 'வழக்கு!'ன்னு வார்த்தைகளால அம்மாக்கு பதிலடி கொடுத்திருக்காரு ப(ட்)ஜெட்).சிதம்பரம். 'வக்கு' இல்லாத 'வடக்கு' கட்சியா இருந்தாக்கூட தேவைப்படுகிற நேரத்துல 'வாக்கு'க்காக கூட்டணி வைக்கிறதுதானே 'தேர்தல் தர்ம சாஸ்திரம்.' என்ன என் வாய் 'வாக்கு' சரிதானே!



க்யாஸ் ஸ்டவ் - வளி அடுப்பு, பிளேடு - மழிப்புத் தகடு, ரசம் - மிளகுச் சாறு, ஆம்லெட் - முட்டையப்பம்... இப்படி ஆயிரக் கணக்கான வார்த்தைகளுக்கு, தமிழார்த்தத்தை அச்சடிச்சு, பொது மக்கள் மத்தியில விநியோகிக்குது பா.ம.க. இனிமே இதே மாதிரி விளம்பரப் பலகைகளையும் பெரிசு பெரிசா அங்கங்கே வைக்கப்போறாங்களாம். சரி, நல்ல முயற்சிதான். ஆனா ஒவ்வொரு வார்த்தை பக்கத்துலயும், ஆங்கிலத்துல அதோட உச்சரிப்பு எப்படி இருக்கும்னு போட்டுருங்க! இல்லாட்டி வீடு வீடா போயி 'டியூஷன்' எடுங்க. ஏன்னா 'தமிழே' வாசிக்கத் தெரியாத கோஷ்டி நிறைய அலையுதுங்கோ! (ஹலோ! சிரிக்காதீங்க மக்களே, சீரியஸாச் சொல்றேன்). அதோட, மாஞ்சா, கோலி, போடாங், சோமாரி, கஸ்மாலம் மாதிரி சென்னைச் செந்தமிழ் வார்த்தைகளும் அடங்கிய பா.ம.க 'சென்னைத் தமிழ் - தமிழ்-செந்தமிழ்' அகராதி ஒண்ணையும் போட்டுருங்க. உபயோகமாக இருக்குமுங்கோ!

நெல்லை மாநகராட்சியிலே, மகளிர் தினத்துல இலவசமா பிறப்புச் சான்றிதழ் கொடுத்திருங்காங்க. ஒருத்தரு பிறந்து 10 நாளே ஆன தன்னோட பொண்ணுக்கு சர்டிபிகேட் கேட்க, மேயரும், கமிஷனரும் அதிர்ச்சியாயிட்டாங்களாம். காரணம், தள்ளாடித் தள்ளாடி சரியா கண்பார்வைக் கூட இல்லாம வந்த அந்த சூப்பர் 'அப்பா'வோட வயசு 75!

# சுஜாதா

## 11

**நா**கரத்தினம் அழகேசனை ஏற இறங்கப் பார்த்தார். கசங்கிய சட்டை, இரண்டு நாள் ஷேவற்ற முகம். கழுத்தில் ஒரு கர்ச்சீப். பை நிறையப் புத்தகங்கள். கொஞ்சம் தலை சீவி முகம் துடைத்தால், அழகாகத்தான் இருப்பான். நேராகப் பார்த்த கண்களில் ஆர்வம்தான் தென்பட்டது. கெட்ட எண்ணங்களுக்குப் பழக்கமில்லாதவன் போலத் தோற்றம். அதேசமயம் புத்தி கூர்மையற்றவன் என்று சொல்ல முடியவில்லை. இவன் யார்? பரமேஸ்வரனைப் பிடிக்க ஓர் ஆயுதமா என்பதை முதலில் ஆராய வேண்டும்'. "தம்பி" என்று பரிவாகக் கூப்பிட்டார்.

"நீ பரமேஸ்வரனுக்குத் தெரிஞ்சவனா?"

"இல்லைங்க, மஞ்சரி அவங்களைப் பார்க்க வந்தேன், நீங்க?"

திடுக்கிடலை மறைத்து புன்னகை காட்டி "நான் மஞ்சரிக்கு மாமன். கோயமுத்தூரு"

"ஆஹா, பழம் நழுவி பால்ல. இப்பதான் வர்ற வழியில ஒரு மஹீந்திரா வேன் பின்னால படிச்சேன், 'கர்த்தர் உன்னைக் காக்கிறார் சங்கீதம் 12, 15'ன்னு! உடனே பலிச்சிருச்சு. உங்க பேர்?"

"நாகரத்தினம்."

"பேர் சகுனமா இல்லை. வெய்ட் எ மினிட். உங்களைப் பத்தி மஞ்சரி சொல்லிருக்கு."

"என்ன சொன்னா?"

"சட்டுனு ஞாபகம் வரலை. இருந்தாலும் நீங்க எனக்கு உதவி பண்ணலாம்."

"என்ன வேணும் சொல்லு. ஆபிசே என்னுதுதான். ஐயர் கிட்ட போவாதிங்க, அவங்களாம் வேலைக்காரங்க."

"நீங்க அரச குலமா?"

"மோர் ஆர் லெஸ்."

"எனக்கு மஞ்சரியுடைய அப்பாவை மீட் பண்ணணும்."

"என்ன விஷயமா?"

"சும்மா கை குலுக்கறதுக்கு. அது போதும். ரொம்ப பிசியா இருக்காரு. கண்ல காட்டவே மாட்டேங்கறா."

"மஞ்சரியை நல்ல பழக்கமா?"

"விபரீத அர்த்தம் எதும் இல்லைன்னா, அப்படித்தான் சொல்லலாம். ரொம்பத் துருவறீங்களே, போன ஜன்மத்தில் கிணறு தோண்டினவரா?" என்று பெரிதாகச் சிரித்து அவர் கையைக் கேட்டான்.

"அடிக்கடிச் சந்திப்பீங்களா?"



பனீர் இளமைத் தொடர்

"உங்க டிக்ஷனரில அடிக்கடிங்கறது என்ன இடைவெளி?"

"யோசிக்காதே, நான் உதவி செய்றேன்."

"அப்படியா? ராமன் சுக்ரீவன் கிட்ட கேட்டாப்பல. உங்களை நம்பலாமா அங்கிள், உங்களை அங்கிள்னு கூப்பிட லாமா?"

"அங்கிள்னு கூப்பிடு, மாப் ளைன்னு கூப்பிடு, நாகுன்னு கூப்பிடு. இந்த ஆபீஸ்ல ஆயிரம் ரூபாய் எல்லாம் பிச்சைக்காசு. கீழ போட் டாக்கூட பொறுக்க மாட்டோம்."

"பில் கேட்ஸ் மாதிரியா? அவருக்கு ஒரு செகண்டுக்கே வருமானம் இருநூற்றைம்பது டாலராம்!"

"நீ பத்தாயிரமாவது கேட்டிருக்கணும். இந்தக் கட்டை வெச்சுக்க. நீ நம்ம வீட்டு மாப்பிள்ளை" என்று பிரிக்காத நூறு ரூபாய்க் கட்டை நீட்டினார்.

"எனக்கு அவ்வளவு பணம் வேண்

# உள்ளம் துறந்தவன்



டாம். புஸ்தகம் வாங்கணுங்க, அவ்வளவு தான். இட்டாலோ கால்வினோ நாவல்."

நாகரத்தினம் "எத்தனை புக்கு வேணா வாங்கிக்க, பில்லை அனுப்பிடு."

"இட்டாலோ கால்வினோ படிச்சிருக்கிங்களா?"

"சின்னப் பிள்ளைல படிச்சிருக்கேன். சமையல் குறிப்புகள் எழுதுவான், இல்லை?"

அவன் சிரித்து "மாஜிக் ரியலிஸத்தில் சமையல் குறிப்பையும் சேர்க்கலாம். ஆனா நீங்க சொல்றது கொஞ்சம் ஓவர்! இவர் இட்டாலியன் ரைட்டர். செத்துப் போய்ட்டார்."

"அவரை ஒருமுறை கோயமுத்தூர் வந்தப்ப சந்திச்சிருக்கேன்."

"ரீல் விடாதிங்க. அவர் க்யூபாவில பிறந்து, இத்தாலில வளர்ந்து, அந்த மொழியில கதைகள் எழுதினவரு."

"உனக்குத் தெரியாதப்பா, அவர் வந்திருக்காரு."

"சான்ஸே இல்லை. பரவாயில்லை, நல்லா புளுகுறிங்க சார்."

"அதை வுடு. நீ சொல்லு, அந்தப் பொண்ணு மஞ்சு ஏதாவது ப்ராமிஸ் பண்ணிருக்கா?"

"இதை நான் ஏன் உங்ககிட்ட சொல்லணும்? கிவ் மி ஒன் ரீஸன்."

"அட, சொல்லுப்பா, நானும் காதல் பண்ணி கல்யாணம் கட்டிகிட்டவன் தான். கில்லாடி நீ. பெரிய தொரட்டியா பிடிச்சிருக்கே, சொல்லு."

அப்போது "அழகி" என்று குரல் கேட்டுத் திரும்பியபோது மஞ்சரி, நிலைமையை ஒரு நிமிஷத்தில் கிரகித்துக் கொண்டு, "அழகி புறப்படு" என்று கை சொடக்கி விரட்டினாள்.

"ஏன் துரத்தறே? ஸார் வந்து, இவரை உனக்குத் தெரிஞ்சிருக்கணுமே."

நாகரத்தினம் கண்கள் ஒத்துழைக்காத புன்னகையோடு மஞ்சரியைப் பார்த்தார் "நல்லாவே தெரியும்."

"புறப்படுன்னா" அதட்டினாள்.

"சார், ரொம்ப நல்லா கனிவா பேசிக்கிட்டிருந்தார். அப்பப்ப நம்மை முட்டாள்னு நெனைச்சுகிட்டு சுவாரஸ்யமா பீலா வுடறார். ஆனா நமக்கு உதவி செய்யறதா சொல்லியிருக்கார்."

"நீ முதல்ல இடத்தைக் காலி பண்ணு."

"நாட் ஸோ ஹார்ஷ் பேபி, சரி ஏதோ உனக்குப் பிடிக்கலை. அப்புறம் பேசலாம், வரேன். வரேன் மிஸ்டர் ராஜரத்தினம்."

"நாகரத்தினம்."

அவன் போனதும் "உன்னை நல்லாத் தெரியும்ங்கறானே மச்சினியே" என்று தோளில் கை வைத்து அருகே அணைத்துக் கொண்டார்.

"அவ்வளவுதானே? மேற்கொண்டு ஏதும் இல்லையே?"

"அவ்வளவுதான்."

"நீ கட்டிக்கப் போறது சரவணனை கண்ணு. தெரியுமில்லை?"

"மாமா, என் யோசனையெல்லாம் அப்பாவைப் பத்தித் தான். அப்பாகிட்ட ஏதும் சொல்ல வேண்டாம்."



"அரபு நாட்டு மன்னரிடமிருந்து ஜப்பானிய நிறுவனத்துக்கு என்ன ஆர்டர் வந்தது?"

"சாமரம் வீசும் பெண்களுக்கு சம்பளம் ரொம்ப கேட்கிறாங்களாம். மயில் தோகை விசிறி வீசும் பெண் ரோபோக்கள் என்ன விலையாகும்னு விசாரிச்சிருக்காரு!"

- யமுனா ரெங்கநாதன்

"மாமாவை ஏர்போர்ட்லருந்து மயக்கத்திலேயே கொண்டாந்தாங்களாம். பரமேஸ்வரன் சொன்னாரு."

"சேச்சே. அதெல்லாம் புரளி, போர்டு ரூம்ல சத்தம் போட்டுக்கிட்டிருக்காரு, பாத்துட்டுப் போங்க."

"அப்புறம் வீட்ல பாத்துக்கறேன். ஜாக்கிரதைம்மா, இந்த மாதிரி லோஃபர்லை எல்லாம் கட் பண்ணிர்றது நல்லது."

"அவன் லோஃபர் இல்லை."

**லே**ண்ட்மார்க்கில் தரையில் சப்பணம் போட்டு உட்கார்ந்து ஜி. கிருஷ்ணமூர்த்தி புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த அழகேசனை, மஞ்சரி சந்தித்து "பைத்தியம் வா" என்று இழுத்து காபிஷாப்புக்கு அழைத்துச் சென்றாள்.

"புரியறாப்பல இருக்கு, புரியறதில்லை."

"எது?"

"புஜி."

"கிடக்கட்டும். அவர்கிட்ட என்ன சொன்னே மட்டி!"

"உங்க மாமன் ரொம்ப நல்லவரா தெரியறார். நம்ம காதலுக்கு உதவி பண்ணறதா சொன்னார்."

"உனக்கு உலகத்தில உள்ளவங்க எல்லாரும் நல்லவங்க அழகி. அவரு தன் மகளை எனக்குக் கட்டிக் கொடுக்கணும்னு ஒத்தைக்கால்ல நிக்கறார்!"

"அதான் லேசா விந்தறாரா?"

அவனை தன் கைப் பையால் வலிக்கு மாறு அடித்தாள். அவன் சிரித்தான். "ஸாரி, ஸாரி, நோ மோர் கடி ஜோக்ஸ். ஒரே ஒரு ஹைக்கூ, கோபயாஷி இஸ்ஸா வோடது."

"'செர்ரி' மலர்கள் பூத்த பின்னும் உலகம் துக்கமாக இருக்கிறது."

"உன் தலை. அழகி, லைஃப்ல ஒரு முறையாவது சீரியஸா இரேன். நான் சொல்றதை கவனமா கேளு."

"நாகரத்தினத்துக்கிட்ட எதும் வெச்சுக்காதே."

"நினைச்சேன். அவர் உன்னைப் பார்த்த பார்வை சரியில்லை. நேராப் பாக்காம மாரைப் பார்க்கறாரு."

"எங்க வீட்டில ஈக்வேஷன்கள் உனக்குத் தெரியாது."

"இனிமே அவர் கூடப் பேசக் கூடாது அவ்வளவுதானே?"

"பேசக் கூடாது."

"ஒக்கே" அப்போது அவன் செல் அடித்தது. அதை எடுத்து "சென்ட்ரல் ஸ்டேஷன்? மே ஐ ஹெல்ப் யூ" என்றான். அவனிடமிருந்து அதைப் பிடுங்கி, அவனை கண்களால் அதட்டி விட்டு "இல்லை சார், இங்க யாருமில்லை, என் ஃப்ரெண்டு கொஞ்சம் கிறுக்கு."

"ஆமா அவனேதான். அப்புறம் பேசறேன் அவனைப் பத்தி"

"அப்படியா எப்ப?" அவள் பேசிக் கொண்டிருக்கையில், தன் முகத்தை அஷ்டகோணலாக்கிக் கொண்டு, சேஷ்டை பண்ணி வாயைக் கிழித்துக் காட்டினான் அவன்.

வேறு பக்கம் திரும்ப அந்தப்பக்கமும் எட்டிப் பார்த்தான். சிரிப்பை அடக்க முடியவில்லை.

"வெரிகுட். விஜியும் வராப்பலயா?"

அவள் போனை அணைத்ததும் "விஜி யாரு?" என்றான்.

"உனக்கு இன்னொரு போட்டி."

"ஓ, அமெரிக்கா மாப்பிள்ளை. வரட்டும். வில் வித்தை, வாள் வீச்சு எதிலும் நான் சளைத்தவனல்ல, நிரூபிக்கிறேன்."

மஞ்சரியின் முகத்தில் கவலை படர்ந்தது. "பாலாவும் வந்துகிட்டிருக்கார்.

**"கனவு கண்டு அழுறியே... ஏன்?"**

**"கனவுல சீரியல் வந்துச் சுங்க... உஹூம்... உஹூம்... உஹூம்..."**

**- அம்பைதேவா**





**'சொ**ல்லியடிப்பேன்' படத்தில், முழுக்க முழுக்க சூப்பர் ஸ்டார் மானரிஸத்தை அப்படியே செய்து காட்டி ஒரு பாடல் முழுக்க ஆடியிருக்கிறார் விவேக். இது எப்படி இருக்கு...?

**- ச.ந.**

அப்பாக்கு நிச்சயம் சீரியஸாத்தான் இருக்கும்."

"உங்கப்பாவுக்கு என்ன ட்ரபிள்? சரியா சொல்லு."

"கார்டியோ மையோபதின்னு ஏதோ சொல்றாங்க, சரியா புரியலை."

"சிம்பிள். ஹார்ட்டு ஒரு பம்ப். அது பம்ப் அடிக்கிற வலிமை அதன் தசைகளுக்கு குறையற வியாதிக்கு பேரு. கை முஷ்டியைக் காட்டி "இதான் ஹார்ட்டுன்னா, இது லெஃப்ட் வெண்டரிக்கிள். உங்கப்பாது என்ன டைப்பு? ஹைப்பர் டிராஃபிக்கா டைலேட்டடா?"

"உனக்கு அரைகுறையா தெரியாததே இல்லையா?"

"இருக்கு. மஞ்சரியின் கண்களில் இருக்கற ஆழம், சில சமயம் கிணத்துக்குள்ள எட்டிப் பார்க்கறாப்பல இருக்கு!"

அவனை வெறித்துப் பார்த்தாள்.

"இப்ப, கண்ணே ஒரு ஹைக்கூ சொல்லுது."

"ஆரம்பிக்காதே."

"மஞ்சரி! உன்னைத் தொடலாமா?"

"என்ன பைத்தியக்காரக் கேள்வி?"

"இப்பலருந்து அடுத்த பத்து வாக்கியங்கள். படு சீரியஸ். மனத்தின் அடித் தளத்திலிருந்து உன்னிடம் உள்ளம் துறந்தவன் சொல்வது. எனக்குப் பயமா இருக்கு மஞ்சரி, யூ ஆர் டூ ரிச். உங்க ஆபீஸ்ல ஆயிரம் ரூபா நோட்டை கீழப் போட்டா பொறுக்க மாட்டாங்களாம். அவ்வளவு பெரிய கம்பெனி சொந்தக்காரர் மகள். நடந்து போனாலும் கூடவே ஒரு கறுப்புக் கார் வருது. மஞ்சரி எனக்குப் பயமா இருக்கு. டேய் அழகேசா, அதிக ஆசைப்படாதேடா, அப்புறம் அதிக ஏமாற்றம் ஏற்பட்டுரும். எப்படி சமாளிக்கப் போறோம். பணம் பிரச்னை இல்லை. மத்தவங்களைப் போல பாலி காட்ல ஒத்தை சுடிதார், கழுத்தில எந்த நகையும் இல்லாம வரணும்னு சொல்ல மாட்டேன். நீ கிடைக்கிறதா இருந்தா எனக்குத் தன்மானம், அவமானம், சன்மானம் எதும் பிரச்னை இல்லை, நீ என்கிட்ட சந்தோஷமா இருப்பியான்னு கியாரண்டி கிடையாது. கல்யாணம் ஆனப்புறம் அலுப்பு வந்துடுமோன்னு பயமா இருக்குது, நீ பட்டினியையேப் பார்க்காம வளந்தவ. மஞ்சரி, ஐ டோண்ட் டிசர்வ் யு. இந்த நிமிஷமே உன் வாழ்க்கைலருந்து விலகுன்னு சொல்லு, குழப்பமில்லை, விலகிக்கறேன்."

"எதாவது உளறாதே, பாரு. அழகி, நான் உங்கிட்ட 'ஐ லவ்யு' சொல்லி மணல்ல கை கோத்து நடக்கற பைத்தியக்கார பிசினஸ் எல்லாம் வெச்சுக்கலை. உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு. கல்யாணம் பண்ணிக்கிட்டப்புறம் என்னைப் பத்தி முழுசா தெரிஞ்சப்பே. என் பிடிவாதம் உனக்குப் புரியும்."

"அப்ப கல்யாணம் உண்டுங்கறே?"

"உலகத்தில எந்தச் சக்தியாலயும் நம்மைப் பிரிக்க முடியாது."

"சினிமா நிறைய பாக்கறியா? டயலாக் உடறியே."

"ஒரு மாறுதலுக்கு புளிச்சுப் போன சினிமா டைலாக் கூட உண்மையா இருக்கு அழகி!"

(தொடரும்)



'படிப்பு என்றால் எப்படி இருக்க வேண்டும்? எப்படிப் படிக்க வேண்டும்? சிஷ்யர்கள் எப்படி இருக்க வேண்டும்? ஆசிரியர்கள் எப்படி இருக்க வேண்டும்?' என்பவற்றை எல்லாம் விளக்கிச் சொல்கிற நீதி நூல்கள் இருக்கின்றன. அவற்றில் 'இளமையிற் கல்' என்று சொல்லியிருக்கிறது. அதுவே பிரம்மச்சரிய ஆசிரமம். ஒருவனுக்கு விவாகம் ஆவதற்கு முந்தி, வினாத் தெரிந்த பிறகு இருக்கக் கூடிய காலம். அதற்குள் படிக்க வேண்டும். ஒரு குருவினிடத்தில் போய்ப் படிக்க வேண்டும் என்பது சாஸ்திரம். சிஷ்யன் பிச்சை எடுத்து வந்து குருவுக்குத் தருவான். பிச்சை எடுப்பதால் அவனுக்கு அகங்காரம் கரைந்து விநயம் ஏற்பட்டது. ஆசிரியருடனேயே வசித்ததால் அவரிடம் உண்மையான பிரியம் ஏற்பட்டது. அவருக்கும் இவனிடம் பிரியம் இருந்தது.

சிஷ்யர்களைக் கூடவே வைத்துக் கொண்டிருந்த குரு, அவர்களுடைய மரியாதையைப் பெறுகிற விதத்தில் நல்ல ஒழுக்கங்களுடனேயே வாழ வேண்டியதாயிற்று. அவரிடம் இயல்பாகவே மாணவனுக்கு பக்தி உண்டாயிற்று.

முன்பு நம் மாணவர்களுக்கு இருந்த குரு பக்தி என்பதே இப்போது அடியோடு போய்விட்டது. பையன் வாத்தியாரைப் பார்த்து, 'கேள்வித் தாளையே கொடுக்க வேண்டும், இல்லாவிட்டால் அடிக்கிறேன்' என்று சொல்லக் கூடிய நிலைமை வந்துவிட்டது.

முன்பு இருந்த பாடங்கள் இப்போதும் இருக்கின்றன. ஆனால் முறை மாறி விட்டது. மருந்து ஒன்றாகவே இருந்தாலும், பத்தியம் மாறி விட்டால் மருந்தே விஷமாகி விடும் என்பது போல ஆகிவிட்டது இது. குருபக்தி போனதும் பத்தியம் போய்விட்டது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய
சுவாமிகள்

# அருள்வாக்கு



# லவ்வின்றி அமையாது லைஃப்!

## — புத்தம் புதிய கிறள்கள்

எவ்வளவு கொள்ளையடித்தாலும்
பதவியுண்டாம்; பதவியில்லை
கூழைக்கும்பிடு போடாத
எம்.எல்.ஏ.க்கு
- என். பாலகிருஷ்ணன், மதுரை

குறைந்தவட்டி அமாருள் உய்க்கும்
கந்துவட்டி
சிறையில் சேர்த்துவிடும்.
- க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

கற்க கசடற கலப்பவை கலந்தபின்
விற்க அதற்குத் தக!
- ஜி. சுந்தரராஜன், திருத்தங்கல்

எஸ்.எம்.எஸ்.ஸினால் சுட்ட நக்கல்
உள்ளாறும்
நோகியாவில் அவள் வறுத்த வடு.
- கே.ஜி.எஸ். கோவிந்தன்,
கிருஷ்ணாபுரம்

முறை செய்து காப்பாற்றும் முதல்வர்
எம்.எல்.ஏக்களுக்கு
இறை என்று வைக்கப்படும்.
- மு. தவசியப்பன், அந்தியூர்

'செல்' என்ப ஏனை 'எஸ்.எம்.எஸ்'
என்ப இவ்விரண்டும்
மூச்சு என்ப வாழும்
இளைஞர்களுக்கு.
- கே.எஸ். நாராயணன்,
சென்னை

உள்ளவர் இல்லாதவர் என்பது
அவரவர்
ஏடிஎம் கார்டு உரைத்து விடும்!

செல் வாங்கல் யார்க்கும்
எளியவாம் - அரியவாம்
பில் கணக்கமின்றிக்
கட்டுதல்!

ஜொள்ளின்றி அமையாது
உலகெனின் யார் யார்க்கும்
லவ்வின்றி அமையாது லைஃப்

இன்கமிங் கால் வருவதே
இன்பம் அவுட்கோயிங் கால்
இன்கம்மையே அழித்து விடும்.

பெல் இனிது பஸ்ஸர் இனிது என்பர்
லேட்டஸ்ட்
செல் ரிங்டோன் கேளாதவர்.

மிஸ்டு கால் கொடுத்தார்க்கும்
உய்வுண்டாம் உய்வில்லை
செல் ஆஃப் செய்த மகற்கு!

சினிமா இன்பம் வேண்டி தியேட்டர்
செல்லாதவர்
சீரியல் இன்பம் வேண்டுபவர்.

வெளியில் 'செல்'லோடு தோன்றுக
அஃதிலார்
வீட்டில் முடங்குதல் நன்று.

- வசந்தி வள்ளுவன்,
மதுரை - 20

உ



# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்

ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

✆ : 04366 273900

## ஏகதின ஸ்ரீ மஹாருத்ர யஞ்ஞம், நவசண்டீ ஹோமம், த்ரிதின லக்ஷார்ச்சனை, திருக்கல்யாண உற்சவம் மற்றும் ஸம்வத்ஸராபிஷேகப் பெருவிழா

**தாரண வருடம் பங்குனி மாதம் 12 ஆம் தேதி வெள்ளி முதல் 15ஆம் தேதி திங்கள் முடிய (25.3.2005 - 28.3.2005)**

அன்புடையீர்,

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. இவற்றின் தொடர்ச்சியாக நிகழும் தாரண வருடம் பங்குனி மாதம் 12ஆம் தேதி வெள்ளி துவங்கி 15ஆம் தேதி திங்கள் முடிய (25.03.2005 - 28.03.2005) **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ உடனுறை ஸ்ரீ ஸற்குணேச்வர பெருமான் திருக்கோயிலில்** உலக நலனை முன்னிட்டு பல விசேஷ ஹோமங்கள், நவசண்டீ ஹோமம், ஸுதர்சன ஹோமம், த்ரிதின லக்ஷார்ச்சனை, ஏகதின ஸ்ரீமஹாருத்ர யஞ்ஞம், திருக்கல்யாண உற்சவம் மற்றும் ஸம்வத்ஸராபிஷேகம் முதலியன நாட்டில் மக்கள் வாழ்வு சிறக்கவும் அறநெறி ஓங்கவும் இறையருளை வேண்டி நடத்தப்பட இருக்கின்றன. இவை சிறப்பாக நடைபெற அனைவரும் தங்களால் இயன்ற ஹோம, பாராயண, ஜப, அர்ச்சனைகளுக்கான கட்டணங்களையோ அல்லது நன்கொடைகளையோ ஸபாவின் பெயருக்கு மணியார்டராகவோ, காசோலையாகவோ அல்லது வரைவுக் காசோலையாகவோ அனுப்பக் கோருகிறோம். அல்லது கீழ்கண்ட முகவரியில் யாரிடமாவது செலுத்தலாம்.

ரூபாய் 600/-ம் அதற்கு மேலும் நன்கொடை அளிப்பவர்களுக்கு பூஜையில் வைத்து அபிமந்திரிக்கப்பட்ட 10 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் பிரஸாதமாக வழங்கப்படும்.

*என்றும் இறைபணியில்*

*Dr. V. **கிருஷ்ணமூர்த்தி***
*பரம்பரை அறங்காவலர்*

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா** (Regd).
32/18, டபீர் புதுத்தெரு, கும்பகோணம் - 612 001.
போன்: 0435-2423297 மற்றும் **கிராமவாசிகள்**

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீமஹா கணபதி ஹோமம் | ரூ.50/- |
| 2. | ஸ்ரீ நவக்ரஹ ஹோமம் | ரூ.50/- |
| 3. | ஸர்வதேவதா ஹோமங்கள் | ரூ.50/- |
| 4. | சிறப்பு அபிஷேகம் | ரூ.50/- |
| 5. | லட்சார்ச்சனை | ரூ.100/- |
| 6. | ஸ்ரீ ஸுதர்சன ஹோமம் | ரூ.100/- |
| 7. | ஸ்ரீ சண்டீஹோமம் (பொது) | ரூ.200/- |
| 8. | ஸ்ரீ சண்டீஜப ஹோம ஸங்கல்பம் | ரூ.250/- |
| 9. | வஸ்த்ரதானம் (ஒரு நபருக்கு) | ரூ.400/- |
| 10. | நவகன்னிகா பூஜை (ஒரு கன்னிகைக்கு) | ரூ.450/- |
| 11. | நவஸுவாஸினி பூஜை (ஒரு ஸுவாஸினிக்கு) | ரூ.600/- |
| 12. | தம்பதி பூஜை (ஒரு தம்பதிக்கு) | ரூ.1000/- |
| 13. | ஸ்ரீ மஹாருத்ரம் ஸங்கல்பம் (ஒரு கணத்திற்கு) | ரூ.1000/- |
| 14. | ஸ்வாமி, அம்பாளுக்கு வேஷ்டி, புடவை (9x5-9 கஜம்) | ரூ.1000/- |
| 15. | ஸந்தர்ப்பணை (ஒருநாள்) | ரூ.2500/- |
| 16. | திருக்கல்யாண உற்சவம் | ரூ.2500/- |
| 17. | அன்னதானம் (ஒருநாள்) | ரூ.5000/- |
| 18. | ஸ்ரீ மஹாருத்ரம் பூர்ண ஸங்கல்பம் | ரூ.5000/- |

குறிப்பு: அட்டவணையில் கொடுக்கப் பட்டுள்ள நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான துகையை **"ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா"**விற்கு மணியார்டர் மூலமோ அல்லது வரைவுக் காசோலை (D.D) மூலமோ அல்லது பொருளாகவோ அனுப்பலாம். அல்லது கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றிற்கு அனுப்பவும்.

**G. குஞ்சிதபாதம், FCA.,**
G. நடேசன் & கோ. டபீர் மேலத்தெரு,
கும்பகோணம்–612 001
போன்: 0435 2420047

**V.L. நாராயண சாஸ்திரிகள்,**
25/1 கப்பாரெட்டித் தெரு,
எஸ்.என்.ஆர். கன்ஸ்ட்ரக்ஷன்ஸ்,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
போன்: 044-24897125

**G. கண்ணன்,** D/127-A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர், சென்னை –78.
போன்: 044-24836495

**R. வைத்தியநாதன்,** மேலாளர்,
இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பிளாட் நெ. 4,
கதவு எண் 12, 29வது தெரு,
தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை - 600 061. போன்: 044 - 22333361

**குடந்தை - பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அருள்மிகு ஸற்குணேஸ்வரர் ஆலயம்.**

## முத்துபாரதி

'க்ர்ச்' உறுமல் சத்தத்துடன் ராமசாமியின் வீட்டின் முன் அரசு ஜீப் நின்றது. அவர் மனைவி வெளியே வந்து பார்த்தாள். பானை போன்ற வயிறு உள்ள ஒருவர் பிதுங்கி வெளியே வந்தார். "ராமசாமி இருக்காரா...?" அதிகாரத் தோரணையில் கேட்டார். இரண்டு வார்த்தை பேசுவதற்குள் மூச்சிரைத்தது.

"ஆர்.டி.ஓ. டி.பிலே தங்கிருக்காரு...! உங்களை விசாரிக்கணுமாம். ஜீப்புலே கூட்டிட்டு வரச் சொன்னாரு...! ம்... சீக்கிரம் கௌம்புங்க...!" இடது தோளை வலிப்பு வந்தவர் போல் வெட்டிக் கொண்டே சொன்னார்.

ஆர்.டி.ஓ. ஜீப். டி.பி விசாரணை, இந்த வார்த்தைகளை உச்சரிக்கும்போது அவர் முகத்தில் பெருமிதமும், ஆணவமும் தலை காட்டியது.

அரசு ஜீப்பில் அவசரமாக அழைத்துச் செல்லப்பட்டார் ராமசாமி. "ராமசாமிய ரகசிய விசாரணைக்குக் கூட்டிகிட்டுப் போறாங்க...!" பக்கத்து வீட்டுக்காரர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர்.

**ரா**மசாமி கடந்த மாதம்தான் வயது முதிர்ச்சி காரணமாக, தபால் அதிகாரி பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். பணிக்காலத்தில் சட்டப்படி வேலை செய்தார். யார் என்ன கேட்டாலும் "அந்த வால்யூம்லே இந்த ரூல் இப்படித்தான் சொல்லுது. அதைதான் செய்யணும்...! பிரிட்டிஷ்காரன் எழுதி வச்சது...! தப்ப முடியாது...!" எதற்கெடுத்தாலும் சட்டம் பேசுவார். அதனாலேயே இவருக்கு 'ரூல் ராமசாமி'னு பேர் வந்திருச்சு.

இப்போது ஓய்வு பெற்று விட்டதால் மொத்தமாக கொஞ்சம் பணம் உள்ளது. எளிமையாக ஒரு வீடு கட்டி காலத்தைக் கழிக்கலாம் என்ற ஆசை, காலம் கடந்து வந்தாலும் நியாயமான ஒன்று.

அவரது சொந்த கிராமமான சுப்பிரமணியபுரத்தில் சிரமப்பட்டு இரண்டு பத்தியில் ஒரு வீடு கட்டினார். திருநெல்வேலியிலிருந்து சுப்பிரமணியபுரம் 18 கி.மீ வடக்கே உள்ளது.

டிசம்பர் - 6ம் தேதி நல்ல நாள் என முடிவு செய்தனர். பால் காய்ச்சும் முன், புது வீட்டில் தாமிரபரணி ஆற்று தண்ணீர் தெளித்தால் நல்லது. பீடை, பிணி எதுவும் நெருங்காது என நண்பர் லத்தீப் சொன்ன யோசனையை ராமசாமி ஏற்றுக் கொண்டார். ராமசாமிதான் ரூல் ராமசாமி ஆச்சே.



புதுவீட்டில் தெளிக்க ஒரு குடம் தாமிரபரணி தண்ணீர் எடுத்துக் கொள்ள அனுமதி வேண்டும் என வட்டாட்சியருக்கு ஒரு மனுவை பத்திரிகையுடன் இணைத்து அனுப்பினார்.

மனுவை படித்துப் பார்த்த வட்டாட்சியர் அ-9 எழுத்தருக்குக் குறிப்புரைக்காக அனுப்பினார்.

'1) புது வீடு கட்ட ஊராட்சி அனுமதி பெறப்பட்டதா? மனுதாரர் குறிப்பிடவில்லை.

2) தாமிரபரணி தண்ணீர் தெளிக்க வேண்டிய காரணத்தை எழுதவில்லை.

3) திருநெல்வேலியிலிருந்து தண்ணீரை பாதயாத்திரையாகக் கொண்டு போனால், சுப்பிரமணியபுரத்திற்கு மௌன்ஸ்புரம் வழியாகத்தான் போக வேண்டும்... அது முஸ்லீம் மக்கள் பெருவாரியாக குடியிருக்கும் பகுதி. எனவே சட்டம் ஒழுங்கு பிரச்னை ஏற்பட வாய்ப்பு உள்ளது.

4) டிசம்பர் 6-ம் தேதியை தேர்ந்தெடுக்கக் காரணம் என்ன...? அன்று பாபர் மசூதி இடிக்கப்பட்ட நாள்...! இதன் அரசியல் பின்னணி என்ன...? கிராம நிருவாக அதிகாரியின் அறிக்கை பெறுதல் நலம்' என குறிப்பு எழுதி, ஆர்.ஐ. மூலம் கிராம நிர்வாக அதிகாரிக்கு அனுப்பி வைத்தார்.

ராமசாமியையும், லத்தீப்பையும் மற்றும் கிராம மக்களையும், விசாரணை

# ரூல் ராமசாமி



செய்து, கிராம நிர்வாக அதிகாரி அவரது அறிக்கையை ஒரே வாரத்தில் சமர்ப்பித்தார்.

ஊராட்சி மன்ற அனுமதி பெற்ற பின்பே திரு. ராமசாமி புது வீடு கட்டியுள்ளார். ஓய்வு பெற்ற தபால் அதிகாரி, சட்டத்தை மதிப்பவர். முஸ்லீம் நண்பர், திரு. 'லத்தீப்' என்பவரின் யோசனைப் படிதான் தாமிரபரணி தண்ணீர் தெளிக்க முடிவு செய்திருக்கிறார்.

மதச் சார்பான இயக்கங்களுக்கும் இவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

இதுநாள்வரை ஒருமுறை கூட வாக்களிக்கவில்லை. இவருக்கு எந்த அரசியல் கட்சியோடும் தொடர்பு இல்லை.

டிசம்பர் - 6 பஞ்சாங்கப்படி நல்ல நாள் என்பதால், கிரகப் பிரவேசம் வைத்துள்ளார். ஆனாலும் காவல்துறையிடமிருந்து அறிக்கை கோருதல் நலம்.' என வி.ஏ.ஓ அறிக்கை கொடுத்தார்.

ராமசாமியின் மனுவை 'அவசரம் - சட்டம் - ஒழுங்கு' என தலைப்பிட்டு பாளையங்கோட்டை காவல்துறை கண்காணிப்பாளருக்கு அனுப்பினார்கள்.

ஸ்பெஷல் பிராஞ்ச் அதிகாரிகள் மூலம் விசாரணையைத் தொடங்கினர். சுப்பிரமணியபுரம் பரபரப்பானது. இதை சாதகமாகப் பயன்படுத்தி மதச் சார்பான ஆதரவை வெளிப்படுத்தின சில அமைப்புகள்.

'தமிழக அரசே! ஒரு குடம் தாமிரபரணி தண்ணீர் எடுக்க கலெக்டரிடம் அனுமதியா...' 'மீண்டும் ஒரு தண்(டி)ணீர் யாத்திரையா...?' என விதவிதமாக சுவரொட்டிகள் ஒட்டினார்கள்.

ராமசாமியின் ஒவ்வொரு அசைவும் ரகசியமாகக் கண்காணிக்கப்பட்டது.

நேரடி விசாரணைக்காக ராமசாமி ஆர்.டி.ஓ அலுவலகத்துக்கு அழைத்து வரப்பட்டார்.

தீவிர விசாரணைக்கிடையில் அலுவலக எழுத்தர் குறுக்கிட்டார். 'தண்ணீர் மற்றும் நீர்வளம் பற்றி முடிவு எடுக்கும் அதிகாரம் வட்டாட்சியருக்கோ, ஆர்.டி.ஓ.வுக்கோ இருப்பதாகத் தெரியவில்லை. இதில் அரசின் கொள்கை சம்பந்தப்பட்டிருப்பதால், இந்த மனுவை மாவட்ட ஆட்சியர் மூலம் தலைமைச் செயலகத்துக்கு அனுப்பிவிடலாம்...!' என ஆர்.டி.ஓவிடம் பரிந்துரைத்தார்.

ராமசாமியின் மனு திருநெல்வேலி மாவட்ட ஆட்சியருக்கு அனுப்பப் பட்டது. கிரகப் பிரவேச நாளான டிசம்பர் 6 காலை வரை எங்கிருந்தும் எந்தவித பதிலுமில்லை.

'ராமசாமி பால் காய்ச்சு நடத்துகிறரா...?' என ரகசியப் போலீஸார் கண்காணித்தனர். எதிர்கட்சிகள் சட்டசபையில் பேசின.

டிசம்பர் 6 - மாலைப் பத்திரிகையில் 98 வயதான மத்திய இணை அமைச்சர் ஒருவர் இறந்து போனதால், மறுநாள் அவரது பூத உடல் தகனம் செய்யப்பட்டு, அஸ்தி தாமிரபரணி, ராமேஸ்வரம், கன்னியாகுமரியில் கரைக்கப்படும் என்ற செய்தி, தலைப்புச் செய்தியாக வெளியானது. பேப்பரைப் படித்தவுடன் ராமசாமி புதிதாகக் கட்டிய வீட்டின் வாசற்படியில் மயங்கி விழுந்தார்...!

''கல்யாணமான புதுசுல நானும் அவரும் ஒரே தட்டுல சாப்பிட்டோம்!''

''அப்புறம் எப்படிப் பிரிஞ்சீங்க?''

''தட்டை யார் கழுவறதுங்கறதுல சண்டை ஆரம்பிச்சது.''

- கொங்கண்ணாபுரம் வே. செந்தில்



# பரீட்சை

**நர்ஸரி ஸ்கூலில் தொடங்கும் டென்ஷன், காலேஜ் அட்மிஷன் வரை நீடித்து, பிள்ளைகள், பெற்றோர், ஆசிரியர்கள் என அனைவரையும் கவலைக் கடலில் கடாசி விடும் டார்ச்சர் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டேயிருக்கிறது. அதைத் தவிர்க்க, செயின்ட் பிரிட்டோஸ் அகாதமி பள்ளிகளின் தாளாளர், விமலா பிரிட்டோ தரும் பரீட்சை, படிப்பு சார்ந்த பயனுள்ள டிப்ஸ்.**

## பெற்றோருக்கு...

- தேர்வு சமயத்தில் நீங்கள் அக்கறை காட்ட வேண்டிய முதல் விஷயம், குடும்ப ஆரோக்கியம். காய்ச்சிய நீரை மட்டுமே குடிப்பது, ஒவ்வாத விஷயங்களைத் தவிர்ப்பது, வெளியில் சாப்பிடாமல் இருப்பது, அதிக எண்ணெய், காரம், புளி சேர்க்காமல் இருப்பது என சாப்பாடு விஷயத்தில் அக்கறை காட்ட வேண்டும். பரீட்சை எழுதும் பிள்ளைக்கு நோய் வந்தால் தான் பிரச்னை என்றில்லை; குடும்பத்தில் உள்ள மற்றவர்களின் உடல்நலம் பாதிக்கப்பட்டாலும், இயல்பான வாழ்க்கை அப்செட் ஆகிவிடும்.





• விமலா பிரிட்டோ

- பரீட்சைக்குத் தயாராகும் மாணவர் உள்ளறையில் படித்துக் கொண்டிருக்க, மற்றவர்கள் ஜாலியாக டீவி பார்த்துக் கொண்டிருந்தால், அவர்கள் கவனம் குறைய வாய்ப்பிருக்கிறது. குறைந்தபட்சம் ஒரு மாதத்துக்காவது



டி.வி., ரேடியோ பயன்படுத் தாமல் இருப்பது நல்லது. டி.வியே வேண்டாம் என்னும் போது, கணவன் மனைவி இருவரும் வீண்வாக்குவாதங் களில் ஈடுபடுவது கூடவே கூடாது!



போரடிக்கக் கூடாது. படிக்கும் விஷயத்தை உள் வாங்கிக் கொண்டு படிக் கிறானா என்று மட்டும் கண்காணியுங்கள். அவ்வப்போது உற்சாகப்படுத் துங்கள். மகிழ்ச்சியான சூழலை

# டென்ஷனா..?

வீட்டில் அமைதியான சூழல் நிலவ வேண்டியது அவசியம்.

● பிள்ளைகள் படிக்கும் அறையை சுத்த மாகவும், நல்ல வெளிச்சத்தோடு காற்றோட் டம் கொண்டதாகவும் வைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. புத்தகங்களை அடுக்கி, சிறு தாள்களை கிளிப்போட்டு, மேஜை யைத் துடைத்து வையுங்கள்.

● தேர்வு நாளின் போது, பிள்ளைகள் அணிய வேண்டிய உடைகளை முன்பே துவைத்து, சலவை செய்து தந்து உதவுங்கள். ஹால் டிக்கெட், வண்டிச் சாவி, சில்லறை, சீஸன் டிக்கெட், என தயாராக எடுத்துக் கொடுங்கள்.

● மாணவர்கள் கண் விழித்துப் படிக் கும்போது, மற்றவர்கள் 'ஹாய்யாக' தூங்கி விடலாமா? யாராவது ஒருவர் இனமும் அவர்கள் படிக்கும் அறையில் சிறிதும் தொல்லை இல்லாத அளவுக்கு, படித்தோ எழுதியோ கம்பெனி தரலாம். டீ போட்டுத் தருவது, முகம் துடைத்துக் கொள்ள நனைத்த டவல் தருவது என உதவலாம்.

● மதிப்பெண் பற்றியே பேசிப் பேசி

உருவாக்குங்கள்.

● பரீட்சையின் முடிவுகள் நாம் எதிர் பார்த்த அளவுக்கு இல்லாமல் போகும் போதுதான், பெற்றோர்கள் இன்னமும் பக்குவமாகச் செயல்பட வேண்டியிருக்கும். "நல்லாதான் படிச்சே! கடுமையாதான் உழைச்சே! மார்க் குறைஞ்சா என்ன? பர வாயில்லை; பெட்டர் லக் நெக்ஸ் டைம்"









என்று அனுசரணையாகப் பேசுங்கள்.

● எல்லாக் குழந்தைகளுமே எல்லாவற்றிலும் நம்பர் ஒன் ஆக வர முடியாது என்ற உண்மையை உணருங்கள். அதேசமயம் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஏதோ ஒரு தனித் திறமை ஒளிந்திருக்கும். அதைக் கண்டுபிடித்து, மெருகேற்றி, உங்கள் பிள்ளைகளைச் சிறக்கச் செய்யலாம்.

## பிள்ளைகளுக்கு...

● பரீட்சை வரட்டும்... போகட்டும்... முதலில் டென்ஷன் ஆகாதீர்கள். மனத்தை சாந்தமாக வைத்துக்கொள்ள தியானம், யோகா செய்யுங்கள். மனசுக்குப் பிடித்த டி.வி நிகழ்ச்சி, அல்லது பாட்டு போன்ற வற்றை பத்து நிமிடம் பார்த்துவிட்டு, படிப்பில் கவனம் செலுத்துங்கள்.

● நிறையக் குழந்தைகள், எக்ஸாம் பயத்தில் சாப்பிடவே மாட்டார்கள். பாலை மட்டும் குடித்துவிட்டு, ஓடி விடுவார்கள். அது ரொம்பத் தப்பு... மூளைக்கு சுறு சுறுப்புத் தந்து, உடலுக்குத் தெம்பையும் அளிக்கக் கூடிய காலை உணவை நிச்சயம் தவிர்க்கக் கூடாது.

● பாடங்களை ஒரேயடியாகப் படிக் காமல், பகுதிப் பகுதியாகப் படிக்கவும். படித்ததும் யாரிடமாவது சொல்லிக் காட்டவும். அடுத்ததாக, எழுதியும் பார்க் கவும். ஒரு விஷயம் மீண்டும் மீண்டும் சொல்லப்படும்போதும், எழுதப்படும் போதும், ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிந்து விடும். குறிப்பாக, சில ஃபார்முலாக் கள், ஈக்வேஷன்ஸ், முக்கிய தேதிகள், பெயர்கள் போன்றவற்றை நண்பர்களி டம் சொல்லச் சொல்லிக் கேட்பது பயன்தரும்.

● அறையிலேயே அடைந்து கிடந்து படித்தால், மூளை களைத்துப் போகும். இடையிடையே குளிர்ந்த நீர் அருந்துவது, ஏதாவது கலகலப்பாகப் பேசுவது, சைக்கிளில் ஒரு ரவுண்டு அடிப்பது என சின்னச் சின்ன பிரேக் எடுத்துக் கொண்டு படிக்கலாம்.

● குரூப் ஸ்டடிக்கு எல்லா மாணவர்களுமே தகுதியானவர்களாக இருப்பதில்லை. சில சமயம் வீண் அரட் டைக்கு வழிவகுத்து விடும். எனவே, ஒத்து ழைக்கும் சுபாவமும், சுய ஆர்வமும் கொண்டவர்களுடன் மட்டும் கூட்டு சேருங்கள்.

● தேர்வு நாள்களில், சில நிமிடங்கள் பிரார்த்தனைக்காக ஒதுக்கவும். இறை நம்பிக்கை பயத்தைக் குறைத்து சுயபலத்தை அதிகரிக்கும்.

● பரீட்சைக்குக் கிளம்பும்போது, என்னென்ன தேவை என பட்டியல் போட்டுக் கொண்டு, சரி பார்த்துக் கொள்வது வீண் டென்ஷன்களைக் குறைக்கும்.

● வினாத்தாளைப் பிரித்ததும் பரபரப் புடன் பதில் எழுதத் தொடங்காமல், வினா என்ன, எத்தனை மதிப்பெண்கள், எப்படி சுருக்கமாகவும் சிறப்பாகவும் பதில் தருவது எனத் தீர்மானம் செய்து கொண்டு எழுதுவது நல்லது. இதனால் எனர்ஜியும் விரயமாகாது. நேரமும் மிச்சமாகும்.

பகுதி, பிரிவு, கேள்வி எண்களைச் சரியாகக் குறிப்பிட்டு, முக்கியமானவற்றை அடிக்கோடிட்டு, தேவைப்பட்டால் படங் கள் வரைந்து, விடைகளை ஹைலைட் செய்து, தெளிவாக எழுதப்படும் போது, மார்க்குகள் லட்டு லட்டாக விழும். நுணுக்கியோ, அடைசலாகவோ, நெருக்கித் தள்ளினால் திருத்துபவர்களுக்கு எரிச்சல்தான் வரும்.

● "படி... படி..." என்று வறுத்தெடுக்கும் பெற்றோரையும் ஆசிரியரையும் வில்லன்

களாகப் பார்க்காதீர்கள். உங்கள் மீது உள்ள அதீத அக்கறையின் வெளிப்பாடு அது என்று உணர்ந்து கொண்டு, கவனத்துடன் படியுங்கள்.

## ஆசிரியர்களுக்கு...

● பெற்றோர்கள், மாணவர்களின் இரண்டாவது ஆசிரியர்கள். ஆசிரியர்கள் மாணவர்களின் இரண்டாவது பெற்றோர்கள். பிள்ளைகளின் ஒருங்கிணைந்த வளர்ச்சியில் ஆசிரியர்களின் பங்கு மகத்தானது என்பதால் கவனத்துடன் கையாளவும்.

● நோ சைல்ட் ஈஸ் எ டம் சைல்ட்! தட்டிக் கொடுத்து, பிரியத்துடன் சொல்லிக் கொடுத்தால், குழந்தைகளும் அதே பிரியத்துடன் கற்றுக் கொள்வார்கள்.

● சும்மா மனப்பாடம் செய்து அப்படியே ஒப்பிப்பதை ஊக்கப்படுத்தாதீர்கள். புரிந்து கொண்டு படிப்பதோடு, அந்த அறிவைத் தேவையான இடத்தில் பயன்படுத்தும் திறமையையும் நீங்கள்தான் வளர்க்க வேண்டும்.

● ஃபோட்டோகிராஃபிக் மெமரி, ஆடியோ விஷுவல் மெமரி, ரீகாலிங் டெக்னிக், என சில நினைவாற்றல் டெக்னிக்குகள் உள்ளன. அவற்றைப் பயன்படுத்தச் சொல்லித்தர வேண்டும்.

● டீனேஜுக்கே உரிய, சில கவனச் சிதறல்கள், பாலியல் ஈர்ப்புகள் இருக்கத்தான் செய்யும். அதை பெரிய சமூகக் குற்றமாக நினைத்து, காயப்படுத்தும் வகையில் எதையும் பேசி விடக் கூடாது. தனியாக அழைத்து, "இது உன் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக இருக்கும்" என்று பக்குவமாகப் புரிய வைக்கலாம்.

● கற்கும் திறன் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்காது. குடும்ப அமைப்பு, பெற்றோரின் அணுகுமுறை, பொருளாதாரச் சூழ்நிலை, ஆரோக்கியம், தனிப்பட்ட பிரச்னைகள் போன்ற பற்பல காரணிகளால் ஒரு மாணவன் சரியாகப் படிக்க முடியாமல் போகலாம். எனவே, "நீ எல்லாம் உருப்படமாட்டே!" என்று சொல்லிச் சொல்லி, தாழ்வு மனப்பான்மையை வளர்க்காதீர்கள். அன்புடன் சொல்லிக் கொடுங்கள். நிச்சயம் பலன் இருக்கும்.

● மாணவர்கள், வளர்ந்து வரும் குழந்தைகள். அந்த வயதுக்கே உரிய குறும்புகளும், அசிரத்தைகளும் இருக்கும்தான். அது புரியாமல், முரட்டுத்தனத்துடன் நடந்து கொள்வது, அவர்களிடம் எதிர்மறையான எண்ணங்களை வளக்க மட்டுமே உதவும். ஏதாவது ஒரு ஆசிரியரைப் பிடிக்காவிட்டால், அவர் எடுக்கும் பாடமும் பிடிக்காமல் போகும். இது அடிப்படை சைல்டு சைக்காலஜி. எனவே... மாணவர்களுக்கு உங்களைப் பிடிக்கிற மாதிரி நடந்து கொள்ளுங்கள்.

''உங்க ஜாதகப்படி உங்களுக்கு டைவர்ஸ் ஆவதற்கு வாய்ப்பே இல்லை மேடம்!''

''என்னங்க இப்படி அதிர்ச்சி யூட்டறீங்க; ஏதாவது பரிகாரம் பண்ணிப் பார்க்கலாமா!''

- யமுனா ரெங்கநாதன்

● 'வேல்யூ எஜுகேஷன்' என்றொரு கல்வி முறை இருக்கிறது. வறட்டு வறட்டு என் பாடத் திட்டத்தை வகுப்பறையில் சுத்தித் தீர்ப்பது மட்டுமே ஆசிரியரின் பணி அல்ல; அன்பு, சுத்தம், ஒழுக்கம், பண்பு, சமுதாயப் பொறுப்பு, தன்னம்பிக்கை, பேச்சுக்கலை, ஆளுமைத் தகுதி வளர்ப்பு, நேர்மை போன்றவற்றையும் சொல்லிக் கொடுத்து வளர்ப்பது ஆசிரியரின் கடமை.



● வகுப்பறையில் நீதிக் கதை, கவிதை, நாட்டு நடப்பு, உலக விஷயங்கள், பொது அறிவு, என பல விஷயங்களையும் கலந்து கற்பனையோடு பாடங்களை நடத்தினால், மாணவர்களுக்கு பாடங்கள் சுமையாக இல்லாமல் சுவையாக இருக்கும். உங்களுக்கும் நல்லதொரு சமுதாயம் உருவாக்கிய நிறைவு கிடைக்கும்.

- ஐஸ்



# கழுதையின் கண்டுபிடிப்பு!

தென்கச்சி சுவாமிநாதன்

**அ**து ஓர் அடர்ந்த காடு.

அங்கே ஒரு கழுதை அங்குமிங்குமாக எதையோ தேடிக் கொண்டிருந்தது.

எதிரே வந்த குதிரை கேட்டது: "என்ன தேடிக் கொண்டிருக்கிறாய்?"

"மகிழ்ச்சியைத் தேடிக் கொண்டிருக் கிறேன்!"

"அது எங்கே இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்து விட்டாயா?"

"இன்னும் இல்லை! உனக்குத் தெரியுமா?"

"தெரியாது... நானும் அதற்காகத்தான் அலைந்து கொண்டிருக்கிறேன்!"

"இருவரும் சேர்ந்து தேடலாம்!"

புறப்பட்டார்கள்...

**வ**ழியில் ஒரு மிருகம் தனக்குரிய ஆகாரத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தது.

அதைப் பார்த்த கழுதை சொன்னது, "ஆகா... சாப்பிடுவதுதான் மகிழ்ச்சி!"

"அவசரப்படாதே... இன்னும் கொஞ்சம் தேடிப் பார்க்கலாம்!" என்றது குதிரை.

இன்னும் நடந்தன.

மரக்கிளையில் குயில் ஒன்று அழகாகக் கூவியது.

"ஆகா... சங்கீதம்தான் மகிழ்ச்சி!"

"பொறு! இன்னும் கொஞ்சம் போய்ப் பார்க்கலாம்!"

கரடி ஒன்று மர நிழலில் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

"ஆகா... தூக்கம்தான் மகிழ்ச்சி!"

"இல்லை... இல்லை... இன்னும் கொஞ்சம் நடப்போம்!"

ஆட்டுக்குட்டி ஒன்று அழுது கொண்டிருந்தது.

"ஏன் அழுகிறாய்?"

"வழி தவறி வந்துவிட்டேன்... அம்மாகிட்டேப் போகணும்!"

ஆட்டுக்குட்டியை அழைத்துக் கொண்டு போய் அதன் தாயிடம் சேர்த்தன.

இப்போது கழுதைக்குப் புரிந்தது... அடுத்தவருக்கு உதவுவதுதான் உண்மையான ஆனந்தம். அந்த விலங்குகளுக்குப் புரிந்துவிட்டது. நமக்கு?

**ஒ**ருவன் தென்னை மரத்தில் ஏறிக் கொண்டிருந்தான். அந்த வழியாக வந்த இன்னொருவன் அவனை அண்ணாந்து பார்த்தான்.

உயரே இருந்தவன் கேட்டான். "என்ன பார்க்கிறே?"

"சும்மா... ஒரு... ஆசை!"

"உயரே இருந்து தேங்காய் விழுவதைப் பார்க்கவா...?"

"இல்லை... நீ விழுவதைப் பார்க்க!"


அனிமேஷன் படங்கள் உருவாவது எப்படி?
- கவர் ஸ்டோரி
நவரத்ன நாதஸ்வரம்!
- சிரிப்புக் கதை
1000/- ரூபாய் பரிசுப் போட்டி
வளம் நிறைந்த ஆப்ரிக்கா!
- போவோமா புது உலகம்
+
படக் கதைகள், ஓவியப் போட்டி, வண்ண போஸ்டர், அனுபவங்கள், இன்னும் பல...
ஏப்ரல் 2005
கோகுலம்
சிறுவர் மாத இதழ்
ரூ.6/- மட்டுமே
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-6000 32

# பரீட்சையில் குரங்குத்தனம்



## அமரர் கல்கி

நமது கல்வி முறையில் முக்கியமான குறை, 'அது வாழ்க்கையோடு ஒட்டி அமையவில்லை, கையினால் தொழில் செய்யும் பயிற்சி அளிக்கவில்லை' என்பதுதான்.

பழைய காலத்துக் கல்வி முறையில் பல குறைபாடுகள் இருந்தன. அவற்றைப் போக்கிக் கல்விமுறையைச் சீர்திருத்த வேண்டும் என்று எத்தனையோ அறிஞர்கள் கதறினார்கள்; கதறிக் கொண்டும் இருக்கிறார்கள்.

கடைசியாக, இவர்கள் செய்திருக்கும் சீர்திருத்தம் என்ன தெரியுமா? பரீட்சை முறையில் சீர்திருத்தம். அதைச் சீர்திருத்தம் என்றும் சொல்லலாம்; அல்லது ஆங்கிலத்தில் 'Monkeying' என்று சொல்வதை அனுசரித்துக் 'குரங்குத்தனம்' என்றும் சொல்லலாம்.

அறிவுள்ள மனிதர்களுக்குப் பூமாலை போட்டால், சிலர் கழுத்திலே போட்டுக் கொண்டிருப்பார்கள்; சிலர் கழட்டி வைப்பார்கள்; சிலர் ஆணியில் மாட்டுவார்கள்.

ஆனால் குரங்கின் கழுத்தில் பூமாலை போட்டால் என்ன செய்யும்? பிய்த்துப் பிய்த்து எறியும். பூவாகவும் பிய்த்து எறியும், இதழாகவும் பிய்த்து எறியும்.

பரீட்சைகளையும் அப்படிப் பிய்த்து எறிய முன் வந்து விட்டார்கள், நம் கல்விச் சீர்திருத்த நிபுணர்கள்!

ஆங்கில பாஷையில் 'குவிஸ்' புத்தகங்கள் என்று சில இப்போது வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் பல விஷயங்களைப் பற்றியும் பல கேள்விகள் இருக்கும். ஒவ்வொன்றுக்கும் நாலு விடைகள் அல்லது ஆறு விடைகள் போட்டிருக்கும். ஒன்றுதான் சரியான விடை. நீங்கள் சரியான விடை சொல்ல முடிகிறதா என்று பார்த்து, உங்கள் மூளையைப் பரிசோதித்துக் கொள்ள வேண்டும் என்பது மேற்படி புத்தகக்காரர்களின் நோக்கம். 'குவிஸ்' புத்தகத்தின் மூலமாகவும் உங்கள் அறிவைச் சோதித்துக் கொள்ளலாம்; அல்லது பைத்தியக்கார ஆஸ்பத்திரி டாக்டரிடம் சென்றும் சோதித்துக் கொள்ளலாம்.

அந்த முறையை நமது கல்வி நிபுணர்கள் இப்போது நம் பிள்ளைகளின் பரீட்சைகளில் கையாளத் தொடங்கி விட்டார்கள்!

இந்த வருஷத்து எஸ்.எஸ்.எல்.சி பரீட்சையில் இந்த முறையைக் கையாளப் போகிறார்களாம். இதற்காக நம் கல்வி நிபுணர்கள் தயாரித்துச் சர்க்கார் கல்வி இலாகா, சில மாதிரிக் கேள்வித்தாள்களை வெளியிட்டிருக்கிறார்கள்.

மாதிரிக்கு நீங்களும் சில கேள்விகளைப் பார்த்து வையுங்கள்.

பொது விஞ்ஞானத்தில் கேள்விகள்:

(கீழ்க்கண்ட கேள்விகள் ஒவ்வொன்றிற்கும் நாலு விடைகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்றுதான் சரியானது. அந்தப் பொருத்தமான விடையின் முன்புள்ள எழுத்தை மாத்திரம் குறிப்பிட்ட இடத்தில் எழுதுக.)

1. வாயில் ஸ்டார்ச்சைச் சர்க்கரையாக

மாற்றும் என்ஸைம் - (a) டிரிப்சின் (b) எரிப்சின் (c) லைபேஸ் (d) டயலின்.

2. கீழ்க்கண்ட உணவுகளில் எதில் குறைவான கொழுப்புச் சத்துக்கள் உள்ளன? (a) அரை பவுண்டு பால், (b) வெள்ளை அரை ரொட்டி (c) ஒரு பவுண்டு கத்தரிக்காய் (d) ஒரு பைண்ட் பால் ஏடு.

3. ஹைடிரஜன் குளோரைடு வாயு வைத் தயாரிக்கக் கீழ்க்கண்ட பொருள்களில் எதை அடர் கந்தக அமிலத்துடன் சேர்க்க வேண்டும். (a) சுண்ணாம்புக் கல் (b) மக்னீசியம் ஸல்பேட்டு (c) பொட்டாசியம் நைட்டிரேட்டு (d) பொட்டாசியம் குளோரைட்.

4. தமனிகளில் (a) பிராணவாயு கலந்த ரத்தம் மாத்திரம் ஓடுகிறது. (b) பிராண வாயு அற்ற ரத்தம் ஓடுகிறது. (c) பிராண வாயு கலந்த ரத்தத்தை அல்லது பிராணவாயு அற்ற ரத்தத்தை இதயத்தின் வெண்டிரிக்கிளிலிருந்து வெளியே எடுத்துச் செல்கிறது. (d) ஜீரணமடைந்த உணவை உட்கிரகிக்கிறது.

இவற்றில் நாலாவது கேள்வியில் (c) விடையில் 'அல்லது' என்பதற்கு என்ன பொருள் என்று யோசியுங்கள்! (d) விடையின் முழு அமைப்பை அதாவது 'தமனிகளில் ஜீரணமடைந்த உணவை உட்கிரகிக்கிறது' என்பதைப் படித்து மூளையைச் சிறிது குழப்பிக் கொள்ளுங்கள்.

பிறகு, மூளை தெளிவடைந்த பிறகு இதெல்லாம் பரீட்சை முறையில் சீர்திருத்தமா அல்லது குரங்குத்தனமா என்று சொல்லுங்கள்.




சரியான பதிலுக்கு மார்க் உண்டு. பிழையான பதிலுக்கு மார்க்குகள் குறைக்கப்படும்.

'நோட்ஸ்' புத்தகங்கள் போட்டு பிள்ளைகளைக் கரையேற்றும் புத்தகக் கம்பெனிக்காரர்கள் சும்மா இருப்பார்களா? அவர்களும் இரவுக்கிரவே நூற்றுக்கணக்கான கேள்விகளையும் ஒவ்வொன்றுக்கும் மூன்று பிழையான விடைகளையும் ஒரு சரியான விடையையும் தயாரித்துப் புத்தகமாக அச்சிட்டுப் பிரகரித்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு புத்தகமும் எழுபது பக்கம், நூறு பக்கம் - இப்படி இருக்கின்றன.

இவ்வளவு பக்கங்களில் அடங்கியுள்ள உத்தேசக் கேள்விகளும், பிழையான விடைகளும் சரியான விடைகளும் தெரிந்திருந்து, தலைபோகிற வேகத்தில் பரீட்சையில் பதில் எழுதிவிட்டு நம் பிள்ளைகள் உருப்படியாக வெளி வர வேண்டும்.

- 'பரீட்சையில் குரங்குத்தனம்' -
**கல்கி கட்டுரைகள் - தொகுதி - 2,**
**மணிவாசகர் பதிப்பகம்**













நடிகர் விஜய் லயோலாவில் விஸ்காம் படித்தவர் சூர்யாவும் அதே கல்லூரி; ஆனால் பி.காம் த்ரிஷா பி.ஏ சைக்காலஜி அஞ்சல் வழியில் படித்தவர் 'காதல்' சந்தியா பத்தாம் வகுப்பு பாஸ்! கவிஞர் தாமரை மெக்கானிக்கல் இன்ஜினியரிங் பட்டதாரி ஜோதிகா பி.காம் கௌதமி எம்.பி.பி.எஸ் ட்ராப் அவுட். இரண்டாம்

# ...ச்சது ஒண்ணு; ...ச்சது பொன்னு!















வருடப் படிப் போடு நிறுத்தி விட்டார் சிம்ரன் பி.ஏ ஆங்கில இலக்கியம் இயக்குனர் தரணி இயந்திரவியல் இன்ஜினியரிங் பட்டதாரி விவேக் எம்.ஏ மணிரத்னம் எம்.பி.ஏ நயன்தாரா பி.ஏ சோஷியாலஜி நடிகை ஷர்மிலி எம்.சி.ஏ. நடிகை ரதி பல் மருத்துவம் படித்தவர் இயக்குநர்கள் கௌதம், சுசி. கணேசன் இருவரும் பி.ஈ. பட்டதாரிகள் அஜித் ப்ளஸ் டூ பிரபு லயோலா மாணவர். பி.ஏ பொருளாதாரம் இயக்குநர் ஷங்கர் இயந்திரவியல் டிப்ளமா கனிஹா, பிலானியில் ஆர்க்கிடெக்சர் படித்தவர் கிரேஸி மோகன் இரசாயனத்தில் பிடெக் பட்டதாரி.

- அ, ஜெ

# இங்கி-பிங்கி எஜுகேஷன்!





பேஸ்பால், கார் ரேஸ், ஃபுட்பால், லைன் ஜம்பிங் - இந்த கேம்ஸ் எல்லாம் உங்க குட்டீஸ் விளையாடிண்டே இருக்காங்க. ஒழுங்கா படிக்க மாட்டேங்கறாங்கன்னு கவலைப்படுறீங்களா? டோண்ட் வொர்ரி... உங்க குழந்தைகள் விளையாண்டுக்கிட்டே, கணக்கு, அறிவியல், வரலாறு, புவியியல்னு கட்டுக்கடங்காம கத்துக்க கை கொடுக்குது funbrain.com. கட்டிகளின் மூளையை, சூப்பர் மூளையாக மாற்ற, ஏகப்பட்ட விஷயங்களை இங்கி-பிங்கி போட்டு விளையாட்டாகச் சொல்கிறது இத்தளம். அதுவும் கிரேடு வாரியாக! குழந்தைகளுக்கு எந்தெந்த கேம்ஸை தேர்ந்தெடுத்துக் கொடுக்கலாமென பெற்றோருக்கும், ஆசிரியர்களுக்கும் ஐடியாக்களையும் கொடுக்கிறார்கள். (நாமெல்லாம் மண்ணுல விளையாண்டோம். இப்ப குட்டீஸ் மௌஸ்ல விளையாடுறாங்க!)

சூடா ஒரு கப் டீ குடிக்கிற நேரத்துக்குள்ள, இந்தியாவில எந்தெந்த யுனிவர்சிட்டியில, எந்தெந்த படிப்பு இருக்குன்னு 'சில-பல' க்ளிக்குகள்ல தெரிஞ்சுக்க தட்டுங்க, www.campusmatters.com என்ன படிக்கலாம், கவுன்சிலிங், லோன், ஸ்காலர்ஷிப் விவரங்கள் என, எளிதாக தகவல்கள் கிடைக்கின்றன. வெளிநாடுகளுக்குச் சென்று படிக்க தேவையான விவரங்களையும் 'வாழைப்பழமாய்' கொடுக்கிறது இவ்வலைத் தளம். ஓ.கே. படிப்பாளிகளே! உங்கள் கல்விக் கனவுகளைத் திறக்கும் சாவிகளைக் கண்டுபிடிக்க இங்கே வரலாம்!

'இருக்கற இடத்துலயிருந்தே படிக்க வழியிருக்கா?' என கேட்கறவங்களுக்கு பதில் சொல்கிறது worldwidelearn.com ஆன்லைனில் பட்டப் படிப்பு, பட்ட மேற்படிப்பு, உயர் பள்ளிக் கல்வி, சான்றிதழ் படிப்புகள், எம்.பி.ஏ என எக்கச்சக்கமா வழிகளைக் காட்டும் தளம் இது. இத்தளம் உலகின் மிகப்பெரிய ஆன்லைன் வழிகாட்டி! (பட்டப்படிப்பு ஓ.கே! பட்டம் விட ஆன்லைன்ல படிப்பு இருக்கா?)

இங்கிலீஷ் மீடியத்துல படிச்சதால, தமிழ் நாக்குல தாண்டவமாடமாட்டேங்குதுனு வருத்தப்படுறீங்களா? தயங்காம www.word2word.com வாங்க. ஏறு மாறா தமிழ் பேசுற நீங்க, நேர் நேர் 'தேமா'ன்னு பேசக் கத்துக்கலாம். தமிழ் மட்டுமில்ல. A-Z என்னென்ன மொழிகளிருக்கோ, அத்தனையும் கத்துத் தர்றாங்க. சொல்ல முடியாது. ஆதிவாசிகள் பாஷைகள் கூட இந்த லிஸ்ட்ல இருக்கும் போல!



- ப்ரௌஸர்

# தாதா... டாக்டர்... தமாஷ்!



''எதுக்கு திடீர்னு மாடி வீடு கட்ட ஆரம் பிச்சுட்டீங்க?''
''என் பையன் மேலே படிக்கணும்னு ஆசைப்படறானே!''



''பரீட்சைக்கு முதல் நாள் என் புஸ் தகமே தொலைஞ்சு போயிடுச்சு! ஆனா லும், சரித்திரப் பாடத்தில் பாஸ் செஞ்சுட்டேன்!''
''ஓ! வரலாறு காணாத வெற்றின்னு சொல்லு!''



''எல்லா பரீட்சைகளிலும் நாலா யிரம், ஐயாயிரம் பக்கங்களுக்கு ஆன்ஸர் ஷீட் எழுதியிருக்கானே? யார் சார் இந்தப் பையன்?''
''யாரோ மெகா சீரியல்களுக்கு கதை எழுதுவறரோட பைய னாம் சார்!''



''சந்தர்ப்பச் சூழ்நிலையால இப்படி கூலிப்படைத் தலைவன் ஆயிட்டேன். இல் லைன்னா, நான் நல்லாப் படிச்சு டாக்டர் ஆகியிருப் பேன்!''
''சரி, விடு! எப்படி இருந்தாலும் தீர்த்துக் கட்டறதுங்கற கொள் கையிலிருந்து மாறலை, இல்லையா?''

- பாஸு

ஏவி.எம்.சரவணன்

# பால்தாக்கரே

தென்னிந்தியாவில் ஹிந்தி எதிர்ப்பு உணர்வு தீவிரமாக இருந்த கால கட்டம் அது.

பள்ளி, கல்லூரி மாணவர்கள் மட்டுமின்றி, அரசியல் ரீதியாகவும் ஹிந்தி எதிர்ப்பு ஊர்வலங்களும், போராட்டங்களும் வலுப்பெற்று வந்தன. தமிழ் தியேட்டர்களில் ஹிந்தித் திரைப்படங்கள் வெளியிடக் கூடாது என்பதில் போராட்டக்காரர்கள் உறுதியாக இருந்தார்கள். இதைக் கண்ட சிவசேனைத் தலைவர் பால்தாக்கரே 'வட இந்தியாவில் தமிழ்த் திரைப்படங்கள் எங்கும் ஓடக்கூடாது' என்று தடை விதித்தார். எனவே 'தோ கல்யாண்' படத்தை மராட்டிய மாநிலத்தில் தியேட்டர்களில் திரையிட முடியாத நிலை.

அப்பச்சி ஒரு முடிவெடுத்தார். பம்பாய்க்குச் சென்று பால்தாக்கரேயைத் நேரில் சந்தித்துப் பேசினார். 'மதர் இந்தியா' பத்திரிகையின் ஆசிரியர் பாபுராவ் படேல், அப்பச்சியின் நெருங்கிய நண்பர். தம்முடன் அவரையும் அழைத்துப் போயிருந்தார்.

"எப்போ தமிழ் நாட்ல ஹிந்திப் படங்கள் ஓடுதுன்னு தெரியுதோ, அப்பதான் உங்க படங்களை இங்க ஓடவிடுவோம்" என்று அவர் அப்பச்சியிடம் தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

சென்னைக்குத் திரும்பியதும் இந்த விவரங்களை எடுத்துக் கூறி, ஹிந்தி எதிர்ப்பில் ஈடுபட்டிருந்த பல்வேறு தரப்பினரையும், குறிப்பாக மாணவர்களை சந்தித்துப் பேச வேண்டுமென்றும், அப்படிப் பேசும்போது, ஹிந்திப் படங்களை இங்கே வெளியிட அனுமதிக்காததால் திரைப் படத் தொழிலுக்கு ஏற்படக் கூடிய பாதகங்களை அவர்களுக்கு விரிவாக எடுத்துச் சொல்ல வேண்டுமென்றும், இந்தப் போராட்டத்தால் நாம் எடுக்கும் ஹிந்திப் படங்களை அங்கு வெளியிட முடியாத நிலை உருவாகியிருப்பதை அவர்களுக்குச் சுட்டிக் காட்டி விளக்க வேண்டுமென்றும் அப்பச்சி விரும்பினார்.




அந்தப் பணியை என் மூத்த சகோதரர் முருகன் முழுமையாக ஏற்றுக் கொண்டு, ஹிந்தி எதிர்ப்புப் போராட்ட மாணவர்களைப் பலமுறை சந்தித்துப் பேசி விவாதித்தார்.

முதலில் ஆவடியில் ஒரு சிறிய தியேட்டரில் ஹிந்திப் படம் ஒன்றை

அந்த நாள் ஞாபகம்-20



• 'அன்பே வா' - எம்.ஜி.ஆர். - சரோஜா தேவி

திரையிட ஏற்பாடு செய்யப்பட்டது. போலீஸ் துணையின்றி, தமிழ்த் திரையுலகின் ஸ்டண்ட் யூனியன் ஆட்களைத் துணைக்கு வைத்துக் கொண்டு, எந்தவிதப் பிரச்னையுமின்றி அங்கே அந்தப் படம் ஓடியது. அதற்கு எங்கள் சகோதரர் முருகனின் முழு முயற்சியே காரணம். அதைத் தொடர்ந்து கொஞ்சம் கொஞ்சமாக, மற்ற தியேட்டர்களிலும் ஹிந்திப் படங்களை வெளியிட ஆரம்பித்தார்கள். என் தந்தையின் முயற்சிகளுக்கு சகோதரர் முருகனின் உழைப்பால் பலன் கிடைத்தது.

தமிழ் நாட்டில் ஹிந்திப் படங்கள் ஓடும் செய்தி பால்தாக்கரேயை எட்டியது.

# போட்ட கன்றழைன்!



• புதிய வானம்...
புதிய பூமி...

திரையுலக நினைவுகள்

அதை அவர் உறுதிப்படுத்திக் கொண்ட பிறகு - கிட்டத்தட்ட பத்து வார கால இடைவெளிக்குப் பின்னர் - எங்கள் 'தோ கல்யாண்' அங்கே மீண்டும் திரையிடப் பட்டது. ஹிந்தி எதிர்ப்புப் பிரச்னை அந்தப் படத்துக்குப் பெரும் விளம்பரத் தைத் தேடித் தந்தது என்ற உண்மையை மறுக்க முடியாது. படத்தின் வெற்றிக்கு நாங்கள் தாக்கரேக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்.

அந்தப் படத்தோடு தொடர்புடைய இன்னொரு சம்பவம் என் நினைவுக்கு வருகிறது.

பொதுவாக காமராஜர், திரைப்படங் களைப் பார்ப்பதில்லை. ஆனால் அப்பச்சி கேட்டுக் கொண்டதன் பேரில் 'குழந்தையும் தெய்வமும்' படத்தைப் பார்த்தார்.

'படம் பார்த்தபின் எங்கள் வீட்டில் பகலுணவுக்கு வரவேண்டும்' என்ற அப்பச்சியின் அழைப்பையும் காமராஜர் ஏற்றுக் கொண்டார். அப்போது அவருக்கு மிகவும் நெருக்கமாக இருந்த 'சினிமா கதிர்' செல்லத்துரை, "தலைவருக்கு அசைவ சாப்பாடு இருந்தால்தான் சரிப் பட்டு வரும்" என்று அப்பச்சியிடம் தெரிவித்தார். அப்பச்சி தீவிர சைவம். உணவு வேளையின்போது அசைவக் காரர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தால், அவர்கள் அருகில் அமர்ந்து சாப்பிட மாட்டார்.

ஆனால் காமராஜருக்காக அசைவ உணவுக்கு ஏற்பாடு செய்தார். காமராஜர் சொன்னபடி வந்து வீட்டில் லஞ்ச் சாப்பிட்டுவிட்டுப் போனார்.

எனக்குத் தெரிந்துச் சாப்பிடும்போது அசைவம் சாப்பிடும் ஒருவர் அருகில் தாமும் அமர்ந்து தமது சைவச் சாப்பாட்டை அப்பச்சி சாப்பிட்டது, காமராஜ் எங்கள் வீட்டில் பகலுணவு சாப்பிட்டபோதுதான்.



• அப்பச்சி - நிஜலிங்கப்பா - காமராஜர்

**அன்பே வா**

நான் சின்ன வயதிலிருந்தே எம்.ஜி.ஆரின் தீவிர ரசிகன். பன்னிரண்டு வயதில் அவரது வீட்டுக்குப் போயிருக் கிறேன். அப்போது அவர் அடையாறு காந்தி நகரில் வசித்து வந்தார். எனது டியூஷன் மாஸ்டர் சந்தான கிருஷ்ண ஐயர்தான் எம்.ஜி.ஆரின் சகோதரர் சக்ரபாணி மகன்களுக்கும், வி.என்.ஜானகி அம்மாளின் மகன் சுரேந்திரனுக்கும் டியூஷன் டீச்சர்.

ஒரு நாள் அவர் என்னை அடையாறு ஆலமரம் பார்க்க அழைத்துப் போயிருந் தார். அங்கிருந்து அப்படியே எம்.ஜி.ஆர். வீட்டுக்குப் போனபோது என்னையும் உடன் வரச் சொன்னார்.

நாங்கள் சென்ற சிறிது நேரத்துக் கெல்லாம் எம்.ஜி.ஆர். உள்ளேயிருந்து திறந்த மார்புடன், வேட்டி மட்டும் கட்டி யிருந்த நிலையில் வந்தார். அப்போது அவருக்கு மிக அடர்த்தியான பரந்த சுருள் முடி. அப்போதுதான் ஷூட்டிங்கி லிருந்து வந்து மேக்கப்பைக் கலைத்திருக்க வேண்டும்.

என்னைப் பார்த்து "யார் இந்தப் பையன்?" என்று டியூஷன் டீச்சரைக் கேட்டார் எம்.ஜி.ஆர்.

"ஏவி.மெய்யப்ப செட்டியார் பையன். பேரு சரவணன்'' என்று என்னை அறிமுகப்படுத்தி வைத்தார் டீச்சர்.

"என்ன படிக்கிறே?''

"ஏழாவது''

"சுரேந்திரன் கூடப் படிக்கிறியா?'' என்று கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டார்.

எம்.ஜி.ஆர். படங்கள் வெளியானால், அன்றைக்கே-முதல் நாளே பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை எனக்கு உண்டு.

அப்போதெல்லாம் அவரது படங்கள் முதலில் தாம்பரத்தில் ரிலீஸாகி அப்புறம் தான் சென்னை நகரில் ரிலீஸ் ஆகும்.

"இங்கே சிட்டியில் ரிலீஸாகாமலா போகும்? அப்ப போய்ப் பாருங்களேன்'' என்பார் அப்பச்சி. ஆனால் முதல் நாளே பார்த்தால்தான் படம் பார்த்த திருப்தி கிடைக்கும் எங்களுக்கு.

> ''என்ன இது, பினாமி நிவாரண நிதி திரட்டுறாங்க?''
> ''தலைவர் சேர்த்து வச்சிருந்த பணத்தப் பூரா அவரோட பினாமி சுருட்டிக்கிட்டு ஓடிட்டாராம்!''
> - அம்பை தேவா

'நாடோடி மன்னன்' படம் வெளியானபோது நானும், என் சகோதரர்கள் முருகன், குமரனும் தாம்பரம் ஜி.ஆர். தியேட்டரில் (இப்போது எம்.ஆர். தியேட்டர் என்று பெயர் மாற்றப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன்) முதல் நாளன்றே படம் பார்த்த த்ரில் இன்னும் நினைவிருக்கிறது.




அவர் கத்திச் சண்டை போடும் ஸ்டைல் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். சண்டை போடும்போது ஒரு பறவையைப் பிடிப்பது போல் லாகவமாகக் கத்தியைப் பிடிக்க வேண்டும் என்பார்கள். ரொம்ப அழுத்தினால் பறவை காலி. ரொம்பவும் இலேசாகப் பிடித்தால் தப்பிப் போய் விடும். அது போலத்தான் கத்தியும். ஒரு குறிப்பிட்ட அளவு அழுத்தம் தந்து பிடித்தால்தான், அதை அழகாகச் சுழற்றி சண்டை போட முடியும். எம்.ஜி.ஆருக்கு அது கை வந்த கலை.

அவருக்கு அடுத்து இக்கலையில் வல்லவர்களாக ரஞ்சன், 'விஜயபுரி வீரன்' ஆனந்தன், எம்.என்.நம்பியார் ஆகியோரைச் சொல்லலாம். நல்ல நடனக் கலைஞரால், லாகவமாக கத்திச் சண்டை போட முடியும் என்பதும் உண்மை. மென்மையான மூவ்மெண்ட்ஸ் போல இருந்தாலும், அதில் வேகமும் வீரமும் கலந்திருக்கும். நான் சொன்ன இந்த நான்கு கலைஞர்களுமே நடனம் தெரிந்தவர்கள் என்பதை மறந்து விடக் கூடாது.

வெளிநாட்டு நடிகர்களில் கத்திச் சண்டையில் எனக்கு மிகவும் பிடித்தவர் எர்ரால் ஃப்ளைன். அவரும் ஒரு நல்ல டான்ஸர்தான்.

சிறிய வயதிலிருந்தே எம்.ஜி.ஆரை எனக்கு மிகவும் பிடித்துப் போனதாலோ என்னவோ, ஏவி.எம். பேனரில் எம்.ஜி.ஆரை வைத்துப் படம் ஒன்று தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் வளர்ந்து கொண்டே வந்தது.

எங்கள் வேண்டுகோளுக்கிணங்க திருலோக்சந்தர் எம்.ஜி.ஆருக்கென ஒரு கதையைத் தயார் செய்தார். அப்போது பிரபலமாக ஓடிய 'கம் செப்டெம்பர்' என்ற ஆங்கிலப் படக் கதையை அடிப்படையாகக் கொண்டது அது. இவ்வளவு முடிந்தும் 'எம்.ஜி.ஆரை வைத்துப் படம் எடுக்கப் போகிறோம்' என்று அப்பச்சியிடம் போய்ச் சொல்ல பயமாகவே இருந்தது. காரணம்...

(தொடரும்)

# டாலடிக்கும் டாலர் வேலைகள்!

"அமெரிக்காவைக் கொஞ்சம் மறந்துடுங்க. ஆஸ்திரேலியா, யு.கே. உங்களுக்கு ரத்தினக்கம்பளம் விரிச்சு காத்துக்கிட்டிருக்கு" என்று அழைப்பு விடுபவர்களில், 'எஸ்கொயர் கேரியர்' இயக்குனர் ஆருத்ரா ஸ்ரீகாந்தும் ஒருவர்.

விவரங்களைக் கேட்டோம்.

"ஆங்கிலத்தில் அடிப்படைத் தேர்ச்சி இருக்க வேண்டும் என்பதற்காக நடத்தப்படும் TOEFL மற்றும் TSEஆகிய தேர்வுகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இதற்கு பதிலாக, ஆஸ்திரேலியா மற்றும் யு.கே. சென்று படிக்க விரும்புபவர்கள் IELTSஎன்ற தேர்வை எழுத வேண்டும். (International English in Testing systems) என்பதன் சுருக்கம் இது.

"IELTS தேர்வில் ஆங்கிலத்தில் பேச்சு, எழுத்து ஆகிய இரண்டு பிரிவுகளுமே அடங்கி விடுவது வசதி. ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறாதவர்கள் கவலைப்பட வேண்டாம். சுமார் மூன்று மாதங்களுக்கான ஆங்கில கோர்ஸ் ஒன்றை நடத்தி, அவர்களைத் தயார் செய்துவிடுவோம்" என்கிறார் ஆருத்ரா.



மேற்கல்விக்கும் வேலை வாய்ப்புக்கும் பலர் அமெரிக்காவை ஏற்கெனவே நாடிக் கொண்டிருக்க, எதற்காக ஆஸ்திரேலியா மற்றும் யு.கே. பக்கம் பார்வை திருப்ப வேண்டும்?

"அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்குப் பிறகு புஷ் அரசு செய்த மாற்றங்களால் EB 3 Retrogation என்பது நடைமுறைக்கு வந்துவிட்டது. இதன்படி இந்தியா, சீனா பிலிப்பைன்ஸ் நாட்டு மக்களின் விசா அதிக அளவு வழங்கப்பட்டுவிட்டதால், (அதாவது இந்த நாடுகளுக்கான கோட்டா முடிந்து விட்டதால்) இந்த நாட்டு மக்களுக்கு விசா எளிதில் கிடைத்து விடாது. இப்போதைய நிலையைக் கணக்கிட்டால், இரண்டு வருடங்களுக்குப் பிறகுதான் விசா விண்ணப்பத்தையே கையிலெடுப்பார்கள். ப்ராஸஸ் செய்ய



ஒன்றரை வருடங்கள் ஆகிவிடும். ஆக மூன்றரை வருடங்கள் விரயமாகிவிடும்."

ஆஸ்திரேலியா மற்றும் யு.கேவுக்கு விசா கிடைப்பது எளிது. அதுவும் மாணவர்களுக்கான விசா கிடைப்பது மேலும் எளிது.

"ப்ளஸ் டூ முடித்தவர்கள் பி.எஸ்ஸி, கைவேலை, ஹோட்டல் மேனேஜ்மெண்ட் போன்ற பல பிரிவுகளில் மேற்படிப்பைத் தொடரலாம். ஏற்கெனவே பட்டதாரி என்றால் நிர்வாகப் படிப்பு, அறிவியல், எம்.எஸ் மேற்படிப்பு படிக்க

லாம். ஆராய்ச்சிக்கு இந்த இரு நாடுகளிலும் பலர் ஸ்பான்சர் செய்யத் தயாராக இருக்கிறார்கள். அந்த நிலையில் அந்த நாடுகளிலேயே நிரந்தரக் குடியுரிமை பெறுவதற்கும் வாய்ப்புகள் இருக்கின்றன. கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். இந்தியாவில் அறிவியல் பட்டப்படிப்பை முடித்தவர்களில் மிகப் பெரும்பாலானோருக்குக் குறைவான சம்பளம்தான் கிடைக்கும். ஆனால் ஆஸ்திரேலியாவிலும், யு.கேவிலும் இவற்றுக்கு டிமாண்ட் அதிகம். பல ஆயிரம் டாலர்கள் சம்பாதிக்கலாம்.

சமீப காலமாக நர்ஸ் பயிற்சிக்கு அதிக டிமாண்ட் ஏற்பட்டிருப்பது தெரிந்திருக்கும். மேலை நாடுகளில் அப்படி ஒரு டிமாண்ட். ஆஸ்திரேலியாவைப் பொறுத்தவரை, மாணவர் விசாவிலே செவிலியர்கள் சென்று விடலாமாம். அங்கே பதினொரு வார செவிலியர் பயிற்சியை முடித்துக் கொண்டு, உடனடியாக வேலையில் சேர்ந்து விடலாம்.

யு.கேவிலும் ஆஸ்திரேலியாவிலும் படிக்கும்போதே வேலை பார்க்கும் திட்டங்கள் உண்டு. படித்துக் கொண்டே வாரத்துக்கு அதிகபட்சம் இருபது மணி நேரம் வேலை பார்க்க, இந்த நாட்டின் பல்கலைக் கழகங்கள் அனுமதிக்கின்றன (இதை விசாவிலே குறிப்பிடுகிறார்கள்) ஆக, மாதம் சுமார் 500 டாலர் வரை படிக்கும் போதே சம்பாதித்து உங்கள் செலவுகளைச் சமாளித்துக் கொள்ளலாம். நல்ல கல்வி, சிறந்த வேலை வாய்ப்பு, வளமான எதிர்காலம் என்று பல கவர்ச்சிகள் இருக்கும்போது பயன்படுத்திக் கொள்வது தானே புத்திசாலித்தனம்? அவ்வளவு ஏன், எங்களைப் போன்ற அமைப்புகள் வெளிநாடு செல்ல தேவைப்படும் வங்கிக் கடனிலிருந்து, பயணம், அங்கு தங்குமிடம் உட்பட எல்லாவற்றுக்குமே ஏற்பாடு செய்து தருகிறோம்."





• ஆருத்ரா ஸ்ரீகாந்த்



"இருந்தாலும் அமெரிக்கா அமெரிக்காதானே" என்பவர்களுக்காக இன்னொரு தூண்டிலையும் வீசுகிறார் ஆருத்ரா. "ஆஸ்திரேலியாவிலோ, யு.கேவிலோ தங்குமிட உரிமை பெற்றுவிட்டால், அங்கிருந்து அமெரிக்காவுக்கு விசா எளிதில் கிடைத்துவிடும்."

மேலும் விவரங்கள் தேவைப்பட்டால் arudhra@e-mail.com-வுடன் தொடர்பு கொள்ளலாம்.

- ஜி.எஸ்.எஸ்

# படிச்ச பாடம்!



"நீங்கள் அரசியலுக்கு வந்து கத்துக்கிட்ட பாடம் என்ன?" என்று சில வி.ஐ.பிகளிடம் கேட்டபோது...

**ஏ.கே. மூர்த்தி**
**(முன்னாள் மத்திய அமைச்சர் பா.ம.க)**

நான் படித்த பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்கள் பாடம் நடத்த வராத சூழ்நிலை இருந்தது. அதன்பிறகு நான் வளர்ந்து, மத்திய அமைச்சராகவும் ஆகிவிட்டேன். இந்தச் சூழ்நிலையில் ஒரு மேடையில் என்னிடம் மனுவொன்று தரப்பட்டது... "எங்கள் பள்ளிக்கு ஆசிரியரே வருவதில்லை... மாற்று ஏற்பாடு செய்து தர வேண்டும்" என அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. எனக்கு தூக்கி வாரிப் போட்டது. இன்னும் இந்தப் பிரச்னை நீடிக்கிறதா...? இதைத் தீர்க்காமல் நாம் அங்கு ரயில் விடலாமா. இங்கு ரயில் விடலாமா...? என்று சிந்திக்கிறோமே என்று நினைத்தேன். அன்றிலிருந்து எனது தொகுதி மேம்பாட்டு நிதியில் அறுபத்தைந்து சதவிகிதத்தை கல்விப் பணிகளுக்கு செலவிட்டு வருகிறேன்... அந்த மேடை நிகழ்ச்சி, எனக்கொரு பாடமாக அமைந்த நிகழ்ச்சி.

**கு. பிச்சாண்டி**
**(தி.மு.க - முன்னாள் அமைச்சர்)**

பொதுமக்களிடம் தேர்தலின்போது நாம் தரும் வாக்குறுதிகளைவிட அவர்கள் வாயிலிருந்து வரும் அவசர கோரிக்கைகளுக்குத்தான் அதிக முன்னுரிமை தர வேண்டும் என்பதுதான் அரசியலில் நான் கற்ற பாடம். 96 தேர்தலின்போது என் தொகுதிக்கு பல திட்டங்கள் கொண்டு வருவதாக வாக்குறுதி அளித்திருந்தேன். அவர்கள் தொகுதி முழுவதும் தண்ணீர்த் தொட்டி வேண்டுமென கோரிக்கை வைத்திருந்தார்கள். தேர்தலில் வென்றவுடன், நான் கொடுத்த வாக்குறுதிகளுடன் அவர்களுடைய கோரிக்கையையும் நிறைவேற்றினேன். சென்ற தேர்தலில் கடுமையான போட்டியில் வென்றபோது, "எங்களுக்குத் தண்ணி கொடுத்த உங்களுக்கு வோட்டுப் போடாம இருப்போமா?" என்று பாசம் பொங்கக் கேட்டார்கள். நான் எவ்வளவு செய்திருந்தாலும், அவங்க வைச்ச கோரிக்கைதான் அவங்க மனசுல இருக்கும். இது நான் கற்ற பாடம்.



* ஜே.எம். ஆருண்

ஜே.எம். ஆரூண் (நாடாளுமன்ற உறுப்பினர் - காங்கிரஸ்)

அரசியல் என்பது ஒரு சர்வகலா பாடசாலை... இதில் கற்றுக் கொள்ள ஏராளமானவை இருந்தாலும், நான் கற்றுக் கொண்ட விஷயம், நாம் அதிகம் பேசாமல் மற்றவரைப் பேசவிட்டு, கவனமாகக் கேட்பது. இப்பொழுது அரசியலில் இருக்கின்ற பிரச்னையே - எதிராளி பேசுவதை முழுவதுமாக கேட்கப் பொறுமையில்லாமல் அவசரமாகப் பேசுவதுதான். திருச்சியில் நடந்த ஒரு மாநாட்டில், மூப்பனார் கிட்டத்தட்ட பதினாறு மணி நேரம் எல்லாரையும் பேசச் சொல்லி, கவனமாகக் கேட்டு, இறுதியாக ரத்தினச் சுருக்கமாகப் பேசினார். மற்றவர் கருத்துக்கு மதிப்பளிப்பதும், பொறுமையோடு பதிலளிப்பதும் மூப்பனாரிடம் நான் கற்ற பாடம்.



* ஏ.கே. மூர்த்தி



* கு. பிச்சாண்டி



* செ.கு. தமிழரசன்

செ.கு. தமிழரசன் (தலைவர் - இந்திய குடியரசுக்கட்சி - சட்டமன்ற உறுப்பினர்)

84லில் பழைய எம்.எல்.ஏ ஹாஸ்டலில் தங்கியிருந்தேன். எங்கள் ஊரிலிருந்து ஏகப்பட்ட இளைஞர்கள் என் அறையில் வந்து தங்குவதுண்டு. ஒருமுறை தர்மபுரியைச் சேர்ந்த இளைஞர் ஒருவர் என் அறையில் இருக்கும் வெஸ்டர்ன் டாய்லெட்டை தண்ணீர்த் தொட்டி என நினைத்து முகம் கழுவிக் கொண்டிருந்தார். அதைப் பார்த்தவுடன் எனக்கு இதயமே நின்றுவிடும் போல ஆகிவிட்டது. அடடா... இத்தனை ஆண்டுகள் அரசியலில் இருக்கிறோம். அடித்தட்டு மக்களுக்காகப் போராடி வருகிறோம். ஆனால் டாய்லெட் தொட்டிக்கும், தண்ணீர்த் தொட்டிக்கும் வித்தியாசம்கூட தெரியாத அளவுக்கு இருக்கிறதே! இந்த நிலை மாறி விழிப்புணர்வு ஏற்படுத்த உழைக்க வேண்டியதுதான் முதல் கடமை என எண்ணிக் கொண்டேன்.

- முராரி

படங்கள்: ராஜன்

விஷ்வக்ஸேனன்

## 34. குற்றங்கள் மூன்று

வீரமும் காதலும் தமிழகத்தில் படைத்துவிட்டுச் சென்ற காவியங்கள் எத்தனையெத்தனையோ, சிற்ப சித்திரங்களிலும், எழுத்திலும் வடித்த கலைஞர்களும், கவிகளும் அவற்றை சிரஞ்சீவிகளாக்கிவிட்டுச் சென்றிருக்கிறார்கள். வீரத்திலும் காதலிலும் காவியங்களைப் படைத்த மாமல்லன், தானே ஒரு அற்புதக் கலைஞனாகவும் வாழ்ந்திருந்ததால், அவன் வடித்த சிற்பங்களும் சித்திரங்களும் அந்தக் காவியங்களை மட்டுமின்றி அவற்றை மீண்டும் படைக்கவும், படிக்கவும் செய்பவர்களையும் கால காலத்துக்கும் சிரஞ்சீவிகளாக வாழ வைத்துக் கொண்டிருக்கின்றன. தனது அதே வம்சத்தில் பிறந்து, சோழ மன்னனுக்காகவே வாழ்ந்து பின்னாளில் மற்றொரு காவியம் படைக்க, இன்னொருவனும் பிறக்கப் போவதை அப்போது அறிந்திருக்காத பராந்தகன், அந்த மாமன்னனுடனான தொடர்பு, தன் வாழ்வில் ஏற்படுத்திவிட்ட மாற்றங்களை எண்ணியெண்ணி வியந்தபடி, அந்தச் சிற்பத்தைப் பார்த்தபடியே நின்றிருந்தான் வெகுநேரம்.

கனவுலகிலிருந்து பராந்தகனை மீட்டு நனவுலகிற்குக் கொண்டு வர அவன் தோளில் தட்டிய பகதத்தன், "பராந்தகா, பல்லவ மன்னரிடமிருந்து நாம் எதிர்பார்த்த செய்தி வந்திருக்கிறதென்று எண்ணுகிறேன். உபதலைவர் ஒருவர் நம்மை அழைக்க வந்து கொண்டிருக்கிறார், பார்" என்றான்.

திரும்பிய பராந்தகன் அந்த மண்டபத்தை நோக்கி சோழர்படை உபதலைவர் ஒருவர் வேகமாக வந்து கொண்டிருப்பதைக் கண்டான். பராந்தகனை நெருங்கி வணங்கிய அந்த உபதலைவனின் முகத்தில் சந்துஷ்டி தெரிந்தது.

"தலைவரே, தாங்கள் கூறியபடி பல்லவ மன்னரிடமிருந்து ஓலை வந்திருக்கிறது. மீண்டும் சபையைக் கூட்ட படைத் தலைவர் உத்தரவிட்டிருக்கிறார். வாருங்கள்" என்றார் அந்த உபதலைவர்.

அடுத்த சில நாழிகைகளில் மீண்டும் கூடிய அந்த மந்திராலோசனை சபையில் பிரதானமாக முகுந்தன் நின்றிருந்தான்.

# மகுட



பல்லவ மன்னர் அளித்த ஓலையை படைத் தலைவரிடம் அளித்தவன், ''படைத் தலைவரே, பல்லவ மன்னர் தாம் ஏற் கெனவே வகுத்திருந்த திட்டம் மாற்றப் பட்டிருப்பதாகவும், விவரம் இந்த ஓலையிலிருப்பதாகவும் கூறினார்'' என்றான்.

ஓலைக் குழலைப் பிரித்துப் படித்த விக்கிரமவரையரின் முகத்தில் வியப்பு தெரிந்தது. பராந்தகனை ஏறெடுத்தவர், "பராந்தகா, உன் யூகத்தின்படியேதான் நிலைமை மாறியிருக்கிறது. ராஷ்டிரகூட வீரர்கள் மல்லைத் துறையில் காத்திருக் கிறார்கள். மகாராணியின் ஓலைப்படி, கங்க மன்னன் சிவமாறன் தன் வீரர்களை இரு கலங்களில் அனுப்பியிருக்கிறான். அவர் களுடன் இணைத்து ஐந்து கலங்களில் ராஷ்டிரகூடரும், கங்க வீரர்களுமாக நாகைத் துறையில் வந்து இறங்கி, சோழ நாட்டிலிருக்கும் ராஷ்டிர கூடர்களையும் இணைத்து பெரும் படையாக தஞ்சையை நோக்கிச் செல்லப் போகிறார்கள். அனேகமாக இத்தனை நேரம் கலங்கள் மல்லைத் துறையை விட்டுப் புறப்பட் டிருக்கலாம்" என்றார்.

சபையில் சற்று நேரம் கனத்த மௌனம் நிலவியது. எல்லோர் மனங்களிலும் ஓடிய அந்தச் சந்தேகத்தை பராந்தகன் கேட்டான், "படைத்தலைவரே, ஐந்து கலங்களில் வரும் வீரர்களையும், இங்கிருந்து சென்று கலந்து

# வைரம்



கொள்பவர்களையும் சேர்த்து உருவாகும் படை மிகப் பலமானதாக இருக்கும். அத்தனை வலுவான படையை எதிர்கொள்ள நம்மிடம் இருக்கும் வீரர்கள் போதுமா?"

"நிச்சயம் போதாது பராந்தகா" படைத் தலைவரின் பதில் உடனே வந்தது.

பராந்தகன் முகத்தில் சிந்தனை படர்ந்தது. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் அது தொனித்தது.

"படைத்தலைவரே, பல்லவ மன்னர் தெரிவித்துள்ளபடி ராஷ்டிரகூடர்களும் கங்க வீரர்களும் நாகைக்கு வந்து இறங்கியதும், இங்குள்ள ராஷ்டிரகூடர்களை இணையவும், தஞ்சையை அடையவும் இன்னும் இரு தினங்களாவது தேவை. இந்த அவகாசத்தை நாம் சரியாகப் பயன்படுத்தினால், இந்தப் போரை நாம் வெல்லலாம். தமிழகத்தின் விடுதலைக்கான போர், சோழ மண்ணிலேயே நடக்கும்."

"உன் எண்ணத்தைக் கூறு பராந்தகா. சபையில் ஏற்றுக் கொள்ளப்பட்டால் செயல்படுத்தலாம்."

"படைத்தலைவரே, இந்த இரண்டு நாள் அவகாசத்தில் நமது வீரர்கள் விரைவாக தஞ்சையை அடையவேண்டும். முகுந்தனிடமே செய்தியனுப்பி, பாண்டிய மன்னரிடம் அவரது மற்றப் படைப் பிரிவுகளையும் தஞ்சைக்கு அழைக்குமாறு கேட்டுக் கொள்ளலாம். தஞ்சைக்கு முன்னதாகவே நாகையிலிருந்து வரும் படைகளை எதிர்கொள்ளலாம்."

"நாம் நாகைக்கே சென்று முன்னதாக அவர்களை எதிர்கொண்டால் என்ன?" உபதலைவன் ஒருவன் குறுக்கிட்டான்.

"உப தலைவரே, சோழ நாட்டிலிருக்கும் ராஷ்டிரகூடர்கள் நாகையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார்கள். நாம் வழியிலேயே அவர்களை எதிர்கொள்ள வேண்டிவரும். சிறுசிறு போர்கள் நம் பயணத்தைத் தாமதமாக்கிவிடும். பெரும் படை நாகையில் வந்து இறங்கும்போது எதிர்கொள்வது சிரமமாகிவிடும். பாண்டிய மன்னரின் உதவியுடன், வரும் படையை எதிர்கொள்வதே பாதுகாப்பு. ஒரே போராகவும், இறுதியான போராகவும் நம் விடுதலைப் போரை அமைத்துக் கொள்வதே சிறந்தது."

அடுத்து எழுந்த நடைமுறைச் சந்தேகங்களுக்கு விடையளித்த படைத் தலைவர், பராந்தகனின் திட்டத்தை ஏற்றுக் கொள்வதாக அறிவித்தார். திட்டத்தின் மாற்றப்பட்ட விவரங்களையும், படைகளை தஞ்சைக்கு அழைக்க வேண்டிய அவசியத்தையும் கூறி பாண்டிய மன்னருக்கு ஓலை எழுதிய படைத்தலைவர், அப்பொழுதே முகுந்தனிடம், அளித்து புறப்படப் பணித்தார்.

ஆயுதங்களைத் திரட்டி பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யவும் அப்போதே உத்தரவிட்ட படைத்தலைவர், திருவெள்ளறையிலிருந்து வந்து கொண்டிருக்கும் ராஜசிம்மனின் புரவிப் படைப் பிரிவை, விரைவாக தஞ்சையை வந்தடைய ஓலையொன்றும் எழுதி வீரனொருவனை அனுப்பினார். நாகையில் வந்து இறங்கும் ராஷ்டிரகூடரையும் கங்க வீரர்களையும் பற்றி அறிய, ஒற்றர்களை நாகைக்கு முன்னதாகச் செல்லவும் பணித்தார்.



"தலைவருக்கு இன்னும் பழைய ஞாபகம் போகல போலிருக்கு!"

"எப்படிச் சொல்றே?"

"கடைத் திறப்பு விழாவுக்கு வந்தவர் ரிப்பனை பிளேடாலதான் வெட்டுவேன்னு அடம் பிடிக்கிறாராம்!"

- கொங்கணாபுரம் வே. செந்தில்



''உங்களுக்கு ரொம்பவும் பிடிக்காதவங்க பற்றியெல்லாம் சொல்லுங்களேன்!''

''எதுக்குங்க?''

''எங்க பத்திரிகையிலே 'நட்பு ஸ்பெஷலை'த் தொடர்ந்து 'விரோதி ஸ்பெஷல்'னு போடப் போறோம்!''

- யமுனா ரெங்கநாதன்

வெகுகாலமாகக் காத்திருந்த இந்தப் போர் சோழ நாட்டுக்கு மட்டுமல்ல, தமிழகத்துக்கே விடுதலைப்போர் என்பதை உணர்ந்திருந்த ஒவ்வொரு வீரனும், உபதலைவர்களும் பெரும் உணர்ச்சிப் பெருக்குடனேயே போருக்குச் சித்தமாகத் தொடங்கினார்கள்.

மறுதினம் அணிவகுத்த சோழர் படை அதிகாலையிலேயே குடந்தையிலிருந்து தஞ்சையை நோக்கி நகர்ந்தது. வழியில் எதிர்ப்பட்ட ஊர்களிலிருந்த ராஷ்டிரகூடர்கள் அப்புறப்படுத்தப்பட்டனர். வழியிலிருந்த கிராமங்களிலிருந்து சோழ மண்ணின் விடுதலைக்காகப் போரில் கலந்து கொள்ள விரும்பிய இளைஞர்கள், அணியின் இறுதி வரிசைகளில் சேர்த்துக் கொள்ளப்பட, தஞ்சையை நெருங்கும்போது சோழர்படை கணிசமாகவே வளர்ந்திருந்தது.

மாலைப்பொழுதில் தஞ்சையை நெருங்கிவிட்ட சோழர்படை, காவிரியின் வடகரையில் இடவை என்னும் ஊரை அடைந்தது. போருக்குத் தகுதியான பரப்பும் வெட்ட வெளியும் அங்கு அமைந்திருப்பதைக் கண்ட படைத்தலைவர் அங்கேயே பாசறை அமைக்க உத்தரவிட்டு, பாண்டிய மன்னருக்கு உடன் செய்தியையும் ஓலையெழுதி அனுப்பினார்.

அதே சமயத்தில் நாகையில் வந்து இறங்கிய ராஷ்டிரகூட, கங்க வீரர்கள் தஞ்சையை நோக்கி முன்னேறத் தொடங்கினார்கள். வெகு துரிதமாகப் பயணம் செய்த அந்தப் பெரும்படை, இடவையில் சோழர் பாசறை அமைந்திருப்பதை அறிந்து, காவிரியின் எதிர்க்கரையில் தன் பாசறையையும் அமைத்தது. அன்றைய இரவே ராஷ்டிரகூடர் படையின் உபதலைவர் ஒருவனும், பல்லவ உபதலைவனாகத் தெரிந்த மற்றொருவனும் சோழர் பாசறையை நோக்கி தூதுவர்களாக வரவும் செய்தனர். அவர்கள் சோழர் பாசறையை அடைந்தபோது பாண்டிய வரகுணனும், சோழர் படைத்தலைவரும், மற்ற உபதலைவர்களுடன் மந்திராலோசனை சபையில் இருந்தனர்.

தூதுவர்களின் வருகை அறிவிக்கப்பட்டதும், அவர்களை உள்ளே அழைத்து வரப் பணித்தான் மன்னன். இருவருக்கும் ஆசனங்கள் அளிக்கவும் உத்தரவிட்டான். பல்லவ உபதலைவன் சபையை வணங்கி இருக்கையில் அமர, உடன் வந்த ராஷ்டிரகூடன் இருக்கையில் அமரவும் மறுத்து, நேரிடையாக வந்த விஷயத்தைக் கூறத் தொடங்கினான்.

"பாண்டிய மன்னரே, எமது மன்னருக்கெதிராக நீங்கள் மூன்று குற்றங்களைப் புரிந்திருக்கிறீர். அவற்றுக்கான பரிகாரங்களுக்கு நீர் ஒப்புக் கொள்வதானால், இந்தப் போர் தவிர்க்கப்படும். நீங்களும் உமது படையும் உயிருடன் பாண்டியநாடு திரும்




பவும் அனுமதிக்கப்படுவீர்கள்."

ராஷ்டிரகூடன் வார்த்தைகளிலிருந்த அகந்தையையும், அவன் தோரணையையும் கண்ட மன்னன் முகத்தில் முறுவல் விரிந்தது.

"நான் புரிந்திருப்பது மூன்று குற்றங்கள் தானா?" மன்னனது கேள்வியும் முறுவலுடன் வந்தது.

"ஆம், மகாராஜா கோவிந்தருக்கெதிராகப் புரட்சி செய்யும் துருவனுக்கு காஞ்சியிலிருந்து தப்ப உதவி செய்தது மட்டுமின்றி, அவனுக்கு படை உதவியும் செய்திருக்கிறீர்கள்."

"பிறகு...?"

"எங்கள் மகாராணியின் அதிகாரத்துக்குட்பட்ட சோழ நாட்டில் அத்துமீறி நுழைந்து பாசறை அமைத்திருக்கிறீர்கள். தஞ்சையையும் ஆக்கிரமித்திருக்கிறீர்கள்."

"மூன்றாவதாக...?"

"மூன்றாவதுதான் மிகப்பெரிய குற்றம். எமது மகாராணியால் கோவிந்தருக்குப் பரிசாக அளிக்கப்பட்ட மாணிக்க ஆரத்தைக் களவாடிச் சென்றவனை உங்கள் ஆதரவில் வைத்திருக்கிறீர்கள்."

அவையில் விக்கிரமவரையர் உட்படப் பல உபதலைவர்கள் முகங்களிலும் கோபாக்னி வீசத் தொடங்கிவிட்டதையும், சில உபதலைவர்களின் வாட்கள் உறைகளிலிருந்து வெளிப்பட்டு விட்டதையும், அந்த ராஷ்டிரகூடன் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. அடுத்து மன்னனது கேள்வி அதே நிதானத்துடன் ஒலித்தது.

"தூதனே, இந்தக் குற்றங்களுக்கெல்லாம் பரிகாரங்களாக நான் என்ன செய்ய வேண்டும்?"

ராஷ்டிரகூடன் ஒருமுறை அவையிலிருந்தவர்களை சுற்றிலும் பார்த்தான். அவன் விழிகள் படைத்தலைவரை அடுத்து அமர்ந்திருந்த பராந்தகன் மீது பதிந்து சற்று நிலைத்தது. மீண்டும் மன்னனை நோக்கியவன் பரிகாரங்களைக் கூறத் தொடங்கினான்.

அவன் கூறக் கூற அவையிலிருந்தவர்களின் உஷ்ணம் உயர்ந்து கொண்டே போய் "அவனை வெட்டியெறியுங்கள்" என்ற கூச்சல் ஒலித்தது. உபதலைவர்களின் உணர்ச்சிவசப்பட்ட குரல்கள் பெரும் கூச்சல்களாக ஒலித்தன. பாண்டிய மன்னன் முகத்திலும் நிதானம் மறைந்து இலேசான உஷ்ணம் தெறித்தது.

தன் கரத்தை உயர்த்தி அனைவரையும் அமர்த்திய மன்னன், இறுதியாக ஒன்றைக் கேட்டான்.

"தூதனே, நீ தூது வந்து தெரிவித்த விஷயங்கள் வெகு அழகாயிருக்கிறது. இருக்கட்டும், ஒன்றைச் சொல், உன்னிடம் இந்தத் தூதைப் பற்றிக் கூறி, உங்கள் ராஷ்டிரகூடர் படையையும், கங்கர் படையையும் நடத்தி வந்திருப்பவர் யார்? கங்க மன்னன் சிவமாறனா? அவனது படைத்தலைவனா? அல்லது ராஷ்டிரகூடர் படைத் தலைவனா?"

ராஷ்டிரகூடன் முகத்தில் விஷமம் வழிந்தது. "நீங்கள் குறிப்பிட்ட எவரும் இல்லை" என்றான் அவன்.

"பின் யார்?"

"பல்லவச் சக்கரவர்த்தி நந்திவர்ம பல்லவர்" என்றான் அந்த ராஷ்டிரகூடன்.

(தொடரும்)

# தவிப்பு



**சா**ப்பிடப் போனாள் நந்தினி. தட்டில் உப்புமா மூடி வைக்கப்பட்டிருந்தது.

'ம்... எனக்குப் பிடிக்காத உப்புமா, என் விருப்பு வெறுப்பு பற்றி யாரிடம் கூறுவது? அம்மா இருந்தால் மனம் திறந்து பேசலாம். சித்தியிடம் வாயே திறக்க முடியாது. அப்பாவோ சித்தியின் கைப்பாவை!'

சிந்தனையிலிருந்து விடுபட்டு, தட்டைக் கழுவி வைத்து விட்டு, ஹாலை எட்டிப் பார்த்தாள். சித்தியும் அப்பாவும் சீரியல் பெண்ணின் அழுகையை அனுதாபத்துடன் ரசித்துக் கொண்டிருந்தனர்.

அறைக்கு வந்து படிக்க உட்கார்ந்தவளால், படிப்பில் கவனம் செலுத்த முடியவில்லை. ஜன்னல் வழியே தெருவைப் பார்ப்பதும், கடியாரத்தைப் பார்ப்பதுமாக, ஒரு தவிப்பில் இருந்தாள்.

'அவன் வரும் நேரம்தான். எப்படியாவது இந்தக் கவரை அவனிடம் சேர்த்துவிட வேண்டும். சித்தியின் கண்ணில் பட்டால் ரகளை பண்ணி விடுவாள். அதோ... அவன் வந்து விட்டான்.'

மெல்லிய குரலில் அவனைக் கூப்பிட்டு, ஜன்னல் வழியே, கையிலிருந்த கவரை அவனிடம் கொடுத்துவிட்டு, சீக்கிரம் போய் விடும்படி சைகை காட்டிவிட்டு, நிம்மதியாய்ப் படிக்க உட்கார்ந்தாள்.

சற்றுத் தொலைவில், அவள் தந்த பிளாஸ்டிக் கவரில் இருந்த உப்புமாவைச் சாப்பிட்டு பசியாறிக் கொண்டிருந்தான் ராப்பிச்சைக்காரன்.

- என். ரங்கநாயகி



# யூ ஆர் அப்பாயிண்டட்!

'ஆளுக்கேற்ற வேலை கொடுத்தால் தான் கம்பெனி உருப்படும்' என அரற்றும் கம்பெனியின் நிர்வாகியா நீங்கள்? இதோ ஒரு யோசனை:

சுமார் நூறு செங்கற்களை ஓர் அறையில் போட்டு விட்டு, சில ஊழியர்களை அந்த அறையில் விட்டு விட்டு சில மணி நேரங்கள் கழித்து அந்த அறைக்குச் சென்று நோட்டம் விடவும்.

* செங்கற்களை எண்ணி... திரும்பவும் எண்ணி... என்று இருந்தால்: அக்கவுண்ட்ஸ்
* அறை முழுதும் செங்கற்களாக பரப்பி நாஸ்தி பண்ணியிருந்தால்: பொறியியல்
* வேறு விதமாக அடுக்கி அழகு பார்த்திருந்தால்: திட்டக்குழு
* ஒருவர் மீது ஒருவர் செங்கற்களை எறிந்து கொண்டிருந்தால்: செயல்துறை (பின்னால் பார்லிமெண்டுக்கு போகக் கூடும்)
* ஹாய்யாக உறங்கிக் கொண்டிருந்தால்: செக்யூரிட்டி
* தூள் தூளாக செங்கற்களை உடைத்திருந்தால்: தகவல் துறை
* சோம்பலாக உட்கார்ந்திருந்தால்: மனித வள மேம்பாட்டுத்துறை
* ஜன்னல் வழியே செங்கற்களைத் தூக்கி யெறிந்தால்: ஸ்டோர்ஸ்
* செங்கற்களை அப்படியே கவ்விப் பிடித்திருந்தால்: கஜானா
* ஒரு கல்லைக் கூட நகர்த்தாமல் இருந்து விட்டால்: சேல்ஸ்
* எப்பவோ இடத்தை காலி பண்ணி யிருந்தால்: மார்க்கெட்டிங்
* ஜன்னல் வழியாக வெளியே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தால்: எக்ஸ்போர்ட்
* கடைசியாக... ஆனால் மிக மிக முக்கியமானது, அவர்களே ஒருவருக்கொருவர் ஜாலியாகப் பேசி அரட்டையடித்து, ஒரு கல்லைக் கூட நகர்த்தாமல் இருந்தால்: வேறென்ன, டாப் மானேஜ்மெண்டில் அமர்த்தவும்!

- லதா சேகர்,
பெங்களூர்











### கடல் நுரை விநாயகர்

கும்பகோணத்திற்கு 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது சுவாமி மலை. இது முருகனின் நான்காவது படை வீடாகும். இதற்குத் தெற்கே ஒரு கி.மீ தொலைவில் அமைந்துள்ளது பெரியநாயகி உடனுறை கற்பக நாதேஸ்வரசுவாமி திருக்கோயில். இந்தக் கோயில் சுவாமி மலை கோயில் நிர்வாகத்தில் உள்ளது. இங்கு சுவேத விநாயகர் தனிச் சன்னதியில் உள்ளார். கடல் நுரையினால் ஆனவர். இவரை தேவேந்திரன் பிரதிஷ்டை செய்ததாக வரலாறு. இவரது துதிக்கை வலப்புறம் சுழிந்து உள்ளதால், இத் தலத்துக்கு திருவலஞ்சுழி என்று பெயர் ஏற்பட்டது. இந்த விநாயகர்

# விநாயகர் விஷ்ணுவின் மகனா?



• ஸ்ரீ ஆதிசக்திபீட மகா கணபதி!

அழகிய கருங்கல் பலகணி மண்டபத்தில் விளங்குகிறார். இவருக்குப் பச்சைக் கற்பூரம் மட்டும் தூவி அபிஷேகம் செய்யப் படுகிறது.

- கல்யாணசுந்தரம், கும்பகோணம்.

### ஸ்ரீ ஆதிசக்திபீட மகா கணபதி!

தாம்பரம் சேலையூர் அருகில் உள்ள மாடம்பாக்கத்தில் பிரசித்தி பெற்ற ஸ்ரீ சக்ரமகாமேரு பதினெண் சித்தர்கள் பிருந்தாவன சக்தி பீடம்



உள்ளது. இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீசக்தி பீட மகா கணபதி, வினை தீர்க்கும் விநாயகராக அருள் பாலிக்கிறார். பிரதான சக்தியாக, சித்தர்களின் சக்தியாக, ஆதிபராசக்தியாக, விளங்கும் இவருக்கு, முழுத் தேங்காயை வைத்து வழி பட்ட பிறகு பதினெண் சித்தர் சக்தி பீடத்தில் அமர்ந்திருக்கும் ஸ்ரீ சுந்தர கணபதியிடம் குறைகளைக் கூறி நிவர்த்தி பெறலாம்.

- பி. லட்சுமி, மயிலாப்பூர்.



### பிள்ளையாரின் தத்துவம்

**வி**நாயகரின் தலை ஞானத்தைக் குறிக்கும். வேதாந்த உண்மைகளைக் கேட்டறியும் இரண்டு பெரிய காதுகள்; ஐங்கரங்கள் ஐந்தொழிலையும் செய்யும் ஆற்றல் உடையவை; சூரிய, சந்திர அக்னியை முக்கண்கள் காட்டுகின்றன, தும்பிக்கைதான் புத்தி; இனிப்பு-கசப்பு, செல்வம் - வறுமை, இன்பம் - துன்பம் என இருப்பவை கலந்த ஒன்றுதான் வாழ்வு என்பதை ஒற்றைக் கொம்பு விளக்குகிறது. அண்டங்கள் அனைத்

தையும், உயிர்களையும் தன்னகத்தே கொண்டது கணபதியின் பெருவயிறு!

- வத்சலா சதாசிவன்,
சென்னை

### பஞ்சபூத விருட்சங்கள்

பஞ்ச பூத நாயகராய்த் திகழும் விநாயகர்; வீற்றிருக்கும் தல விருட்சங்கள் ஐந்தும் ஐம்பூதங்களைக் குறிக்கும்.

அரசமரம் - ஆகாயம்,
வாத நாராயண மரம் - வாயு,
வன்னிமரம் - தீ,
நெல்லிமரம் - நீர்,
ஆலமரம் - மண்.

- வயலூர் பா. கருணா

விநாயகரின் தந்தை சிவபெருமான் என்பது அனைவருக்கும் தெரிந்திருக்க, 'விஷ்ணுவுக்குப் பிள்ளை ஆனாயே' என்று கணபதியைத் துதிக்கிறார், ஒரு பக்திமான்.

'ஜகன்னாத விடலகே மகனாகி
த்வாபர
யுகதி ஜெனிஸித கருணா நீ ஸலஹோ'

என்று ஒரு கன்னட மொழிப் பாடல் இருக்கிறது.

"த்வாபர யுகத்தில் கருணையினால் மஹா விஷ்ணுவுக்குப் பிள்ளையாகப் பிறந்தாயே" என்று புதிர் போடுகின்றார். இசைக் கவிஞர் பாடியதற்கு, அதுவும் பக்திப் பெருக்கால் பாடியதற்கு, பக்தியில் திளைத்த பெரியோர்களால்தான் சரியான பொருள் கூற முடியும். இந்தப் புதிரை விடுவித்து விளக்கியவர், எங்களுடைய குருநாதர் புதுக்கோட்டை ப்ரம்மஸ்ரீ கோபால கிருஷ்ண பாகவதர்.

வேதவியாசர் மஹாவிஷ்ணுவின் அவதாரம். அவரிடம் மஹா பாரதத்தைப் பொருள் உணர்ந்து எழுதியதால், கணபதி சீடன் ஆகின்றார். சீடனும் பிள்ளையும் சமம் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. 'த்வாபர யுகத்தில் மஹா விஷ்ணுவுக்குப் பிள்ளையாகப் பிறந்தாயே' என்று பாடியது மிகப் பொருத்தமல்லவா!

- ஏரல் கிருஷ்ணமூர்த்தி,
சாலிகிராமம்



மத்திய பட்ஜெட்டைத் தொடர்ந்து பங்கு மார்க்கெட்டில் பங்குகளின் விலை வேகமாக ஏறத் தொடங்கியுள்ளது. ஒரே வாரத்தில் மும்பை பங்கு மார்க்கெட்டின் sensex குறியீடு 300 புள்ளிகளுக்கும் அதிகமாக ஏறி இருக்கிறது. இது சுமார் 4½ சதவிகித ஏற்றமாகும்.

பங்குச்சந்தை

# வெறி தரும் ஒரு வரி!

ஒரு பிரசித்தி பெற்ற ஆங்கில பொருளாதார தினசரியில், வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் மீண்டும் பெரிய அளவில் இந்திய மார்க்கெட்டில் முதலீடு செய்து வருவதாகவும் மார்ச் மாதம் முதல் நான்கு நாட்களிலேயே இந்த நிறுவனங்கள் சுமார் 572 மில்லியன் டாலர் (அதாவது சுமார் 2,574 கோடி ரூபாய்). இந்திய பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்து இருப்பதாகவும் தெரிவித்திருக்கிறது.

பிப்ரவரி மாதம் இந்த வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள், இந்திய பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்த தொகை சுமார் 1.9 பில்லியன் டாலர் அதாவது சுமார் 8550 - கோடி ரூபாய். தொடர்ந்து இந்த நிறுவனங்கள் இந்திய பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்து வருகின்றன.

வரும் நிதி ஆண்டில் கம்பெனிகளின் செயல்பாடுகள் நன்றாக இருக்க வாய்ப்புண்டு என்றாலும், விஷயம் அறிந்தவர்கள் கம்பெனிகளின் மீது விதிக்க இருக்கும் ஒரு புதிய வரி யோசனையைப் பற்றி தங்களது கவலையைத் தெரிவித்திருக்கிறார்கள். Fringe Benefits எனப்படும் ஊழியர்களுக்கு அளிக்கப்படும் சில சலுகைகளின் மீது இந்த வரி விதிக்கப்படும். ஆனால் இந்த வரி யோசனையை, பல நோக்கில் மீண்டும் ஆராய இருப்பதாக நமது நிதி மந்திரி கூறி இருக்கிறார். இந்த வரியின் பாதிப்பு கம்பெனிகளை எப்படி தாக்கக்கூடும் என்பதை, இந்த வரியைப் பற்றி ஒரு முடிவு தெரிந்தவுடன் பார்ப்போம்.

ஒரு சுவையான செய்தி. பஞ்சாப் நேஷனல் பாங்க் மீண்டும் மூலதனம் திரட்ட இருப்பதைப் பற்றி முன்பு எழுதி இருந்தோம். இந்த வங்கி அதிகப்படி மூலதனத்துக்காக 8 கோடி பங்குகளை, பங்கு ஒன்றுக்கு ரூபாய் 350லிருந்து 390 வரை விலை நிர்ணயித்து மார்ச் 7ம் தேதி விற்பனையை அறிவித்தது. விற்பனை ஆரம்பித்த சில நிமிஷங்களிலேயே அத்தனைப் பங்குகளுக்கும் விண்ணப்பங்களும் பணமும் வந்து விட்டதாகச் செய்திகள் தெரிவிக்கின்றன. வந்த பணம் சுமார் 3000 கோடி ரூபாய். இந்த விற்பனை மார்ச் 11ம் தேதி முடிவடையும்போது, பஞ்சாப் நேஷனல் வங்கி அறிவித்திருந்ததைவிடப் பல மடங்குக்கு விண்ணப்பங்களும் பணமும் வந்து குவிந்திருக்கும்.

### டிப்ஸ்

பூனாவில் உள்ள பஜாஜ் ஆட்டோ என்ற நிறுவனம், இரண்டு மற்றும் மூன்று சக்கர வாகனங்களின் உற்பத்தியில் முதல் இடத்தில் இருக்கிறது. இந்தக் கம்பெனியின் செயல்பாடு ஒவ்வொரு வருஷமும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. இந்தக் கம்பெனியின் பங்குகளை வாங்கலாம். விலை ஏற வாய்ப்புண்டு.

**- வி. கோபாலன்**

அனுராதா சுந்தரம்

# தலையணை மந்திரம்!

அன்று மாலை அலுவலகத்திலிருந்து வந்த அருண் மிகவும் உற்சாகமான மனநிலையில் இருந்தான். அவனது இரண்டு வருட உழைப்புக்காக, கம்பெனியில் பெரிய பதவி உயர்வு கிடைத்திருக்கிறது. இந்த மகிழ்ச்சியை முதலில் அப்பா, அம்மா இருவருக்கும் சொல்லி, நமஸ்கரித்தான். அலுவலகம் விட்டு வந்த மனைவி வாணிக்கும் ஒரே சந்தோஷம்தான். இரவு வேலை எல்லாம் முடிந்து தனித்திருந்த வேளையில், "என்னங்க, நான் ஒண்ணு சொன்னால் கோபிக்க மாட்டீங்களே?" என்றாள்.

"சொல்லும்மா" என்றான் அருண்.

"வந்து, நமக்கு கல்யாணம் ஆகி அஞ்சு வருஷம் ஆச்சு. முதல்ல உங்களுக்கு சம்பளம் குறைவு. தீபக்கும் உடனே பிறந்துட்டான். குழந்தையைப் பார்த்துக்க பெரியவங்க துணை வேணும்னு கூட்டுக் குடும்பமாவே இருந்தாச்சு. இப்போ தீபக்குக்கு நாலு வயசாயிடுச்சு. உங்களுக்கு சம்பளம் நிறைய வரப் போகுது. இனியும் அம்மா அப்பாவுடன் இந்த சின்ன வீட்டில் இருக்க வேண்டுமா? தனிக் குடித்தனம் போலாமே!"என்றாள்.

'கூட்டுக் குடும்பத்தில் பிரைவசி குறைவுதான். இடமும் போதவில்லை. சம்பளம் கூடுதலாக வருவதால், மூன்று படுக்கை அறைகள் கொண்ட வீடு கூட பார்க்கலாம். ஆனால் வயதான பெற்றோரிடம் இதை எப்படிச் சொல்வது?' என்று யோசித்தவாறு படுக்கப் போனான்.

காலை டிபன் சாப்பிடும் நேரத்தில் அப்பா வந்தார். "அருண் உன்னோடு கொஞ்சம் பேச வேண்டும்" என்றார்.

"அப்பா, நான் இன்று பத்து மணிக்குத்தான் ஆபீஸ் போவேன்! என்ன விஷயம்?" என்றான்.

"ஐந்து வருடங்களாக உனக்கு சம்பளம் போதலைனு என் சொந்த வீட்டில் பென்ஷனை உனக்குக் கொடுத்துட்டு சேர்ந்து இருந்தோம். அம்மாவும் உன் குழந்தையைப் பார்த்துக்க எங்கும் போக முடியாமல் காவல் இருந்தாள். இப்போ உனக்கு வசதி





வந்துடுச்சு. குழந்தையும் பெரியவனாயிட்டான். எங்களுக்கும் கோவில், பஜனை, பிரவசனம்னு போக ஆசையிருக்கு. நானும் அம்மாவும் என் நண்பர் வீட்டில் ஒரு போர்ஷனுக்கு தனிக் குடித்தனம் போகப் போகிறோம். வயசான காலத்தில் நாங்க இஷ்டம்போல் சமைப்போம், பழம், கஞ்சினு முடிச்சுக்குவோம். இதற்கு என் பென்ஷன் பணம் போதும். அதனால நீ வாணி கிட்ட இதை பக்குவமாக எடுத்துச் சொல்" என்றாரே பார்க்கலாம்!

அருண் செய்வதறியாது திகைத்து நின்றான்! ○

# ஆஹா, எத்தனை



இந்தியத் தரக் கட்டுப்பாட்டுக் கழகம் சான்றிதழ் வழங்கியிருக்கிற கல்லூரி, சென்னை தரமணியில் இயங்கும் டாக்டர் தர்மாம்பாள் அரசு பாலிடெக்னிக் கல்லூரி.

“10ஆவது தேறியிருக்கும் பெண்கள் மூன்று வருடங்களும், 12ஆவது தேறிய பெண்கள் இரண்டு வருடங்களும் பயிலுவதற்கு ஏற்ற மாதிரி, ஒன்பது டிப்ளமா பயிற்சி வகுப்புகள் நடத்துகிறோம்!'' என்றார் பிரின்ஸிபால் பிரேமா ராஜவல்லி கத்லீன்.

''என்னென்ன பாடங்கள்?''

விளக்க ஆரம்பித்தார் துணை பிரின்ஸி, பெட்டி நிர்மலா:

“1. சிவில் இஞ்சினீயரிங், 2. எலக்ட்ரானிக்ஸ் அண்ட் கம்யூனிகேஷன், 3. கார்மெண்ட் டெக்னாலஜி, 4. மாடர்ன் ஆபீஸ் பிராக்டீஸ், 5. ஆர்க்கிடெக்சுரல் அஸிஸ்டென்ட்ஷிப், 6. இன்ஸ்ட்ருமென்டேஷன் அண்ட் கண்ட்ரோல், 7. காஸ்மடாலஜி, 8. கம்ப்யூட்டர் இஞ்சினீயரிங், 9. சிவில் இஞ்சினீயரிங்கில் என்வயர்மென்டல் இஞ்சினீயரிங்,





இதில், சிவில் இஞ்சினீயரிங் டிப்ளமா பெற்ற பிறகு, இன்டீரியர் டிசைன் அண்ட் மாடல் மேக்கிங்கிலும், கம்ப்யூட்டர் இஞ்சினீயரிங்கில் கம்ப்யூட்டர் அப்ளிகேஷன்ஸ் ஒன்றரை ஆண்டுகள் மேற்கொண்டு சிறப்புப் பயிற்சி பெறவும் வாய்ப்புகள் அளிக்கிறோம்!''

இவை தவிர, பிற்பட்ட வகுப்பினருக்கு, மிகவும் பின் தங்கிய வகுப்பினருக்கு, எஸ்.சி - எஸ்.டி வகுப்பினருக்கு, நிறையவே குறுகிய காலப் பயிற்சிகள் நடத்துகிறார்கள். எல்லாமே இலவசக் கல்வி! இதில் பியூட்டீஷியன், டிரஸ் மேக்கிங் அண்ட் மெஷின் எம்பிராய்டரி, செக்ரடேரியல் பிராக்டீஸ் மற்றும் ஜுவல்லரி டெக்னாலஜி பயிற்சிகள் இருக்கின்றன. அத்தனையும் இலவசம் மட்டுமல்ல; எஸ்சி-எஸ்டி பிரிவினர் என்றால், மாதம் 500 ரூபாய் உதவித் தொகை வேறு கொடுக்கிறார்கள்!



''எந்தத் தொழில் துறையாவது, தங்கள் தேவைக்கு ஏற்ற மாதிரி பயிற்சி வகுப்புகள் நடத்தித் தருமாறு கோரினால், அதற்கும் எங்கள் பாலிடெக்னிக்கில் வசதி இருக்கிறது. பத்துநாள் ஸ்பெஷலைஸ்ட் பயிற்சி வகுப்புகள் இவை. உதாரணமாக சுற்றுச்சூழல் துறையில், அல்லது பாதுகாப்புப் பயிற்சித் துறையில் தங்கள் ஊழியர்களுக்குப் பத்துநாட்கள் பயிற்சி தர வேண்டும் என்றால், அதற்கு நாங்கள் ஒப்புக்கொண்டு பயிற்சி தருகிறோம்.

''உலகத் தங்க கவுன்சில் எங்கள் கல்லூரியில் நகைகள் டிசைன் செய்து தயாரிக்க என்றே 50 லட்ச ரூபாய் உதவித் தொகை வழங்கி இருக்கிறார்கள். இது தவிர, அப்ரய்சர் கோர்ஸ் (மதிப்பீடு செய்யும் பயிற்சி) நடத்துகிறோம். வங்கிகளில் இவர்களுக்கு வேலை வாய்ப்புகள் இருக்கின்றன!'' என்கிறார் நிர்மலா.



• பிரேமா ராஜவல்லி கத்லின்

# வாய்ப்புகளம்!

உடல் ஊனமுற்ற பெண்களுக்கும் இந்த பாலிடெக்னிக்கில் பல பயிற்சி வகுப்புகள் சிறப்பாக நடத்தப்படுகின்றன. மத்திய அரசின் மனித வள மேம்பாட்டுத் துறை,- இந்த வகுப்புகளை இலவசமாக நடத்த நிதியுதவி அளிக்கிறது; ஹாஸ்டல் - மெஸ் செலவுகளைக் கல்லூரியே ஏற்றுக்கொள்கிறது! புத்தகங்களையும் கொடுத்து விடுகிறது!

பியூட்டீஷியன், பெர்சனல் செக்ரடரி போன்ற வகுப்புகளுக்கு நல்ல டிமாண்ட் இருக்கிறது.

''கம்ப்யூட்டர் பயிற்சி பெற்ற ஸ்டெனோகிராபர்கள் தேவை என்றால், எங்களைத் தொடர்பு கொள்ளுங்கள்!'' என்கிறார் நிர்மலா.

உலக வங்கி இரண்டு கோடி ரூபாய் நிதியுதவி வழங்கியிருக்கிறது இந்தக் கல்லூரியின் மேம்பாட்டுத் திட்டங்களுக்காக. அது ஒன்றே போதாதோ, இந்தக் கல்வி நிலையத்தின் தரத்தை எடுத்துச் சொல்ல?

**- சாருகேசி**

படங்கள்: **வெங்கடேஷ்**

அனுராதா ரமணன்

10

துடைப்பத்தால் அடி வாங்கிய எட்டுக் கால் பூச்சி, சிறிது நேரத்துக்கு தன் எட்டுக் கால்களையும் சுருக்கிக்கொண்டு செத்தாற் போலக் கிடக்குமே...

அது போன்றதொரு பிரமையில் உறைந்து போய் உட்கார்ந்திருந்தார் பரமேஸ்வரன்.

சாதாரணமாய் இந்தியாவுக்கு வந்து விட்டு, 'டலாஸ்' போய்ச் சேரும் தன் மகள், அங்கிருந்து தான் பத்திரமாய் வீடு வந்து சேர்ந்து விட்டதை இவர்களுக்கு ஃபோன் மூலம் தெரிவிப்பாள்; அப்பொழுது மணி விடியற்காலை ஐந்து அல்லது ஐந்தரையாக இருக்கும்.

நள்ளிரவில் ஃபோன் செய்ய வேண்டாம் என்பதற்காக, பொழுது விடியும் வரை காத்திருந்து ஃபோன் செய்வதாகச் சொல்வாள்.

அதைக் கூட பரமேஸ்வரன், மனைவியிடம் தெள்ளத் தெளிவாகச் சொல்லி அனுப்பியிருந்தார்.

"சுகந்தா... ராத்திரி முழுக்கத் தூங்காம உட்கார்ந்திருப்பேன். போய்ச் சேர்ந்ததும் ஃபோன் பண்ணிடு. அர்த்த ராத்திரியில அப்பாவோடத் தூக்கத்தைக் கெடுக்காதேன்னு ப்ரியா சொல்லுவா. உன் ஃபோன் வந்ததுக்கு அப்புறம் தான் மூச்சே வரும் எனக்கு. தெரிஞ்சுதா?"

அழகாக, நாட்டியம் கற்றுக் கொள்ளும் சிறுமி, கழுத்தை வெட்டி அபிநயிப்பது போல ஆட்டினாளே இந்த சுகந்தா...

பாதி ராத்திரி மூன்று மணிக்கே எழுந்து, ஒரு ஆவர்த்தனம் வெற்றிலை பாக்கு, புகையிலையை மென்று, கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாய் பாய்ந்து பாய்ந்து நடந்து, நடுவே ஓடிய கண்டெலியை அடிப்பதா, வேண்டாமா எனச் சற்று நேரம் திகைத்து, ஐந்து மணி சுமாருக்கு சுகந்தாவின் புகைப்படத்தை மேல் துண்டால் அழுந்தத் துடைத்து, கட்டிலுக்குப் பக்கத்தில் வைத்து, ஃபோன் ரிஸீவர் ஒழுங்காக அதனிடத்தில் வைக்கப்பட்டிருக்கிறதா என நாலு தரம் சரிபார்த்து...

காலை ஆறரை மணிக்கு கீழ் வீட்டிலிருந்து ஃபிளாஸ்கில் காபி வந்து விட்டது. ஏழு மணிக்கு வீடு பெருக்கும் ஆயா வந்து, இவரது கவலை புரியாமல் கேட்டாள்:

"அம்மா போய்ச் சேர்ந்து ஃபோன் பேசிட்டாங்களா..."

"இன்னும் இல்லே?"

"இத்தினி நேரம் வந்திருமே... ப்ரியா பாப்பா விடிகாலையிலயே பேசிருமில்லே..."

"..........."

"தாயும் மகளும் பார்த்துக்கறாங்க இல்லே... பேச்சுப் பராக்குல, இத்த மறந்து போயிருப்பாங்களாயிருக்கும்..."

பரமேஸ்வரனுக்கு அடி வயிற்றிலிருந்து துக்கம் பற்றிக் கொண்டு வந்தது... தொண்டையில் பந்தாக அடைத்தது.

"அப்படியும் இருக்குமா...?"

"பொண்ணைப் பார்த்த சந்தோஷத்துல, தாலி கட்டின புருஷன் ரெண்டாம் பட்சமாப் போயிருந்தா இவளுக்கு..."

"இப்பவே இப்படியின்னா... ஆறு மாசத்துல - 'பரமேஸ்வரன் யார்'ன்னு கேட்பாளோ...."

அவர், கூண்டில் அடைபட்ட புலி போல உறுமிக் கொண்டிருந்த சமயத்தில் தான் தொலைபேசி ஒலித்தது.

பாய்ந்து சென்று எடுக்கப் போனவர்,

கலகல தொடர்

# மாம் ஃப்ரம் இண்டியா

திடீரென, தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டு, சிறிது நேரம் கையைக் கட்டிக் கொண்டு நின்றார்.

"இருக்கட்டும். இவ, பொண்ணுகிட்ட கொஞ்சிக் குலாவிட்டு, நிதானமா ஃபோன் பண்ணினா, நான் உடனே எடுக்கணுமா... நாலு தரம் அடிக்கட்டும்..."

கோபத்தில் விறைத்துக் கொண்டு நிற்கும் சிறுவன் போல, தொலை பேசியையே முறைத்துக் கொண்டு நிற்க...

ஆயாவுக்கு இவரது மனநிலை புரியுமா...

"அய்யரே... இன்னா நீ... ஃபோனு அடிக்குது... பார்த்துகினு 'கம்'முனு கிறே... குந்திகினே தூங்கிறியா?"

இதற்கு மேலும் சும்மா



யிருந்தால் அவள் ஊரைக் கூட்டி விடுவாள்.

பரமேஸ்வரன் அவளிடம் எரிந்து விழுந்தபடியே ரிஸீவரை எடுத்தார்.

"நீ உன் வேலையைப் பாரு. எல்லாம் எனக்குத் தெரியும்... ஹலோ..."

'எதிர் முனையிலிருந்து, தாமதத்துக்கான காரணம் இனிக் கொஞ்சலாய் வரும். அப்போது இன்னும் கொஞ்சம் எகிற வேண்டும். குரலைக் கேட்டதும் பாகாய் உருகி விடக் கூடாது...'

– இப்படியெல்லாம் மனக்கோட்டை கட்டியவரின் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது பல்பீர் சிங்தான்.

"ஹலோ... மை டியர் ஃபிரண்ட்... ஐயாம் பல்பீர்..."

"இவன் எதுக்கு நடுவுல... பூஜை வேளையில் கரடி மாதிரி."

"ஒரு வேளை சுகந்தாவுக்கு ஐ.எஸ்.டி.போன் போட்டுத் தர்றானோ..."

'எமகாதகன்... எதுடா சாக்குன்னு காத்துண்டிருப்பானே...'

மனம் எண்ணாததை எல்லாம் எண்ண, எதிர் முனையில், நிதானமாய் இழுத்து இழுத்து ஆங்கிலத்தில் சுகந்தா காணாமல் போன செய்தி....

விஷயம் மண்டையில் ஏறவே சிறிது நேரம் பிடித்தது பரமேஸ்வரனுக்கு.

"என்னது... காணோமா... என்னடா சொல்றே...?"

அவர், தன்னை மறந்து தமிழில் கத்தினார்.

"சுகந்தா டலாஸ் ஏர் போர்ட்டில் தொலைந்து போய் விட்டாள்... தேடிக் கொண்டிருக்கிறோம்... எதற்கும் நீங்க கவலைப்படாமல் இருங்கள். பிரியாவும், நானும் டலாஸ் போலீசில் சொல்லியிருக்கிறோம்... கூடிய சீக்கிரம் கண்டுபிடித்து விடுவார்கள்..."

பல்பீர் சிங், ராணுவத்தில் பணியாற்றிய பழக்க தோஷத்தில் - எப்படி ஒரு ராணுவ வீரர் தொலைந்து போய் விட்டால், முகாமுக்குத் தகவல் கொடுப்பாரோ, அந்த மாதிரி கொடுக்க –

பரமேஸ்வரன், அத்தியாயத்தின் முதல் வரியில் அடித்துப் போட்ட எட்டுக்கால் பூச்சி மாதிரி ஒரு கணம் பிரமித்து உட்கார்ந்து விட்டார்.

"ஐயய்யோ... இப்ப என்ன செய்யறது?"

"அப்பவே நான் படிச்சுப் படிச்சு சொன்னேன்... இப்படி வைரத் தோடும், பேஸரியுமா டாலடிக்கப் போக வேண்டாம்னு... கேட்டாளா..."

"இது மாதிரி ஒரு அழகியை, அமெரிக்காக்காரன் அவன் ஆயுசுலப் பார்த்திருக்க மாட்டான்... எவன், என்னோட செல்லத்தைக் கடத்திண்டுப் போனானோ... என் தங்கம், எங்கே என்னவெல்லாம் கஷ்டப் படறாளோ... இது தெரியாம, அவளை நான் கோவிச்சுண்டு இருந்தேனே... மடையன்..."

அவர் அப்படியே மலைத்து உட்கார்ந்திருக்க - கண்ணெதிரே சற்று முன், சுகந்தாவிடமிருந்து வரும் தொலைபேசிக்காகக் காத்திருந்த சமயத்தில், பரமேஸ்வரன் பொழுது போகாமல் டி.வி ரிமோட்டை அழுத்தியதில், ஏதோ ஒரு தமிழ்ச் சேனலில் அந்த நேரம் பார்த்து அடிமைப் பெண் ஜெயலலிதா ஆடிக் கொண்டிருக்க...

"ஆடாமல் ஆடுகிறேன்... பாடாமல் பாடுகிறேன்... ஆண்டவனைத் தேடுகிறேன் வா...வா...வா..."



"மன்னா! நகர்வலம் போய் என்ன கண்டு பிடித்தீர்கள்?"

"அரண்மனை உணவை விட நைட் கடை இட்லிக்கு ருசி அதிகம் என்று நிச்சயமாகத் தெரிய வந்தது, அமைச்சரே!"

- நெல்லையப்புரம் செல்வன்

"சொடேர்..."
சவுக்கு ஒலிக்க...
"ஷ்...ஷ்...ஷ்..."

வலியில் துடித்த முகம்... பரமேஸ்வரனின் கண்களுக்கு சுகந்தாவாகத் தெரிய...

துடித்துப் போய் விட்டார் மனிதர்...

'சட்'டெனப் பாய்ந்து டி.வியை நிறுத்தினார். இதற்குள் மறுபடியும் தொலைபேசி அலறியது.

'கிடைச்சிட்டா... கிடைச்சிட்டா...'

மனசு கிடந்து அடித்துக் கொள்ள, வேகமாய் போய் ரிஸீவரை எடுத்தார்.

அயனாவரத்திலிருந்து அவருடைய அத்தைப் பெண்தான் பேசினாள்.

"அம்மாஞ்சி... என்னது இது... இடிய எறக்கிட்டா அம்மாமீ..."

"என்ன உளர்றே...?"

"அய்யய்யோ... உனக்கு விஷயமே தெரியாதா? 'டலாஸ்' போன உன் அகமுடையாளை யாரோ 'கிட்நாப்' பண்ணிட்டானாமே... அமெரிக்காவே பதை பதைச்சுக்கிடக்கு. நீயானா எருமை மாட்டு மேல எண்ணெய் மழை பெய்ஞ்சாப்பல, நிதானமாக் கேட்கறியே..."

"சரசு இப்பத்தான் அந்தத் தலைப்பாக்காரன் ஃபோன் பண்ணிச் சொன்னான். இன்னும் ஒண்ணும் தகவல் சரியாத் தெரியலே. அங்கே போலீஸ்லே சொல்லியிருக்குன்னு... எனக்கு என்னமோ சுகந்தா பத்திரமாத் தான் இருப்பான்னு தோணறது... உனக்கு யார் சொன்னா...?"

"நன்னாத்தான் இருக்கு... நம்ம கோண்டு கலிஃபோர்னியாவுலதானே இருக்கான். அங்கேயெல்லாம் டி.வி நியூஸ்லே, அம்மாமி காணாமப் போன சேதி வந்தாச்சாம்... ஃபோட்டோ கூடப் போட்டிருக்காளாமே. அதைப் பார்த்துட்டு கோண்டு, அலறி அடிச்சிண்டு எனக்கு ஃபோன் செஞ்சு, 'ஏம்மா, இது நம்ம பரமு அங்கிள் ஒய்ஃப்தானே?'ன்னு கேட்டான். எனக்கு சப்த நாடியும் ஒடுங்கிப் போயிடுத்து... அம்மாஞ்சி... என்னது... பேச்சு மூச்சைக் காணும்... அம்மாஞ்சி...!"

உண்மையிலேயே பரமேஸ்வரன் மயக்கம் போடாதக் குறை.

வீடு வாசலைப் பெருக்கி முடித்த ஆயா தான், அவர் தொலைபேசியில் தொடர்ந்து பேசிய பேச்சுக்களை, அவளது சுபாவப்படி ஒட்டுக் கேட்டு, பரமுவின் கையிலிருந்து நழுவிய ரிஸீவரை எடுத்து, அதனிடத்தில் வைத்து விட்டு, 'ஓ'என ஒப்பாரி வைத்தாள்.

"அய்யோவ்... நா இன்னான்னு சொல்லுவேன்... ஏதுன்னு சொல்லுவேன்... அய்யேவ்... அசஞ்சு நடந்தாக்க ஆருரு தேர் போல... அய்யேவ்... சிலுப்பி நடந்தாக்க சிங்கார ரதம் போல... அய்யேவ்.. மஞ்சக் கிழங்குக்குப் பொட்டு வச்சு பார்த்தாப் போல... அய்யேவ், இஞ்சிக் கொத்துக்கு இருவாட்சி வச்சாப் போல அய்யேவ்..."

அவளது அலறல் கீழ் வீடு வரையில் பாய்ந்து, அத்தனைப் பேரையும் மேலே ஏறி வரச் செய்தது. அக்கம் பக்கம் எல்லாம் சாரி சாரியாய் வர...

"என்ன சார் ஆச்சு... மாமி நன்னா இருந்தாளே..."

"பொண்ணைப் பார்க்கப் போறதாச் சொன்னாங்க... வழியில..."

"ஹார்ட் அட்டாக்கா..."

"நோ, நோ... ஹை ஜாக் போல..."

"ப்ளேனையேவா. இருக்காதே... இருந்தா நியூஸ் வந்திருக்குமே... நான் தினமும் பொழுது விடியறச்சேயே ஸ்டார் நியூஸ் பார்த்துடுவேனே..."

"நேத்து என் கனவுல நடிகை மும்தாஜ் வந்தாங்க!"
"அதை ஏண்டா இப்படி வருத்தமா சொல்ற?"
"பின்ன, தீவிரவாதிகள் கூட தொடர்பு வச்சிருக்கேன்னு போலீஸ் என்னை விசாரிச்சிட்டுப் போகுதே!"
- விநோத்



"சார் பாவம்... பேந்தப் பேந்த முழிக்கிறார் பாருங்க. முதல்லே அவரை எழுப்பி உட்கார வையுங்க. யாருப்பா அங்கே... காபி, ஹார்லிக்ஸ் எதையாவது கொடுங்க..."

கூடம் கொள்ளாத கூட்டம்...

அவர் இதுவரையில் பார்த்தேயிராத ஒரு பாட்டி, சுவாதீனமாய் சமையலறைக்குள் புகுந்து எதையெதையோ உருட்டி, தம்ளர் நிறைய மோர் கொண்டு வந்து தந்தாள். இன்னொரு அறிமுகமே இல்லாத மனிதர். பரமேஸ்வரனுக்கு வருகிற டெலிபோன் கால்களுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

"எஸ்... ஆமா சார். எங்களுக்கே இப்பத்தான் நியூஸ் தெரியும். சாராலே பேச முடியலே. ரொம்பவும் நெர்வஸ்ஸா இருக்கார். நீங்க அப்புறம் பேசுங்களேன். நான் சொல்லிடறேன். உங்க பேரு சிதம்பரம் ஜெயராமனா... யாரு பாட்டுப் பாடற வரா... அவரில்லையா... ஆமா. அவர்தான் போயிட்டாரே... சிதம்பரத்துல இருக்கற இன்னொரு ஜெயராமனா...? ஓ.கே... ஓ.கே..."

தன்னைச் சுற்றி இத்தனை அமர்க்களம் எப்படி ஏற்பட்டது என்பதே புரியாமல் 'திருதிரு'வென விழித்தபடியே, மோரை வாங்கிக் குடித்தவருக்கு -

'சுகந்தா உண்மையிலேயே காணாமல் போய் விட்டாள்' என்கிற செய்தி மறுபடியும் மண்டையில் உறைக்க...

அத்தனைக் கூட்டத்தையும் பிளந்து கொண்டு... வீடியோ கேமராவும் கையுமாக நாலைந்து பேர்...

"சார்... நாங்க '-'சேனல்லேயிருந்து வந்திருக்கோம்... உங்க மனைவியப் பத்தி காலையில என்.டி.டி.வியிலப் பார்த்தோம். என்ன சார் நடந்தது...?"

பரமேஸ்வரன் விதிர்விதிர்த்துப் போனார்.

என்ன நடந்தது என்பது அவருக்கே தெரியாத போது - என்னவென்று சொல்லுவார்?

(தொடரும்)



# கனவின் முகவரி

முகவரி நிரந்தரமாகும் வீடு
சின்ன அழகான தோட்டத்துடன்..
அகலக்கால் வைத்து
மெதுவாய் எழுந்து
விழித்தெழ நழுவிய கனவாய்
அரைகுறையாய்...

கடன்களால் கட்டப்படும் வீடுகள்
கனவுகளால் கைவிடப்படுகின்றன
கவலைகளின் கூரைகளில்
முகவரிகள் நிரந்தரமாய்த் தொலைகின்றன
வீடும் கனவும்
ஒன்றை ஒன்று கட்டிக் கொள்ளும்
ரகசியம்

வெவ்வேறு வீடுகளில்
வெவ்வேறு கனவுகளில்
கனவுகள் கொம்பு சீவிய கவலைகளில்
முகவரியில்லை
நிரந்தரம் மட்டுமே!

- துரை.ஜெயப்பிரகாஷ்

# நடக்குமென்பார்; நடக்கும்!



## அக்னிசர்மா

விருச்சிக ராசிகாரரான சிட்டிபாபுவுக்கு வி.ஐ.பிகள் ஆதரவு உண்டாம்.



**மேஷம்:** எதிர்பாராத பயணமும், எடுத்த காரியங்கள்ல வெற்றியும் உங்களுக்கு உற்சாகமும் தெம்பும் தரும் வாரங்க இது. உங்க துணிவும் நம்பிக்கையும் தெளிவான மனநிலையைக் கொடுக்கும். தேவைக்கேற்ற பண வசதி கிட்டும். ஆபீஸ்லயும் எதிர்பாராத திருப்பங்கள் சில காத்திருக்கு. புது முயற்சிகள் வெற்றி பெறும். தொழில், வியாபாரத்தில் லாபம் கூடும். கொடுக்கல் வாங்கல்ல மட்டும் நிதானம் தேவை. குடும்பத்தில் ஒற்றுமை அதிகரிக்கும். சுபகாரிய முயற்சிகள் பலிதமாகும். பெண்களுக்கு எண்ணம் ஈடேறும். உற்சாகமான, மகிழ்ச்சியான வாரம்.



**ரிஷபம்:** தெய்வ பலமும், தெய்வீக ஈடுபாடும் கூடி உங்க காரியங்கள்லே வெற்றிகளைக் குவிக்கிற வாரங்க இது. எதிர்ப்புகள் மறையும். புது அறிமுகங்கள் சில கிடைக்கும். பண நடமாட்டம் தாராளமா இருக்கும். பிரபு, தனவான்கள் ஆதரவு கை கொடுக்கும். ஆபீஸ்லயும் இது சிறப்பான வாரம். திருப்பங்கள் சிலது எதிர்பார்த்தபடி நேரக் காத்திருக்கு. சரியா பயன்படுத்திக்கிட்டா நல்ல பலன் கிடைக்கும். தொழில், வியாபாரத்தில் இதுவரை இருந்த நெருக்கடிகள் மறையும். குடும்பத்தில் குதூகலம் நிறையும். புது வீடு, வாகனம், சொத் துன்னு சேரும். பெண் களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**மிதுனம்:** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு சதா சர்வ காலமும் இருக்கிறவங்க சாதனை படைக்கப் போற வாரங்க இது. வெளி நாட்டுத் தொடர்பு அதிக அனுகூலம் தரும். பொருளாதார நிலைமை மேன்மை பெறும். ஆபீஸ்ல முன்னேற்றமான வாரம். பிரச்னைகள் தீர்ந்து சுமுகமான சூழ்நிலை உருவாகும். அதனால அனுகூலங்கள் கூடும். சிலருக்குப் பதவி உயர்வு, இட மாற்றம் ஏற்படும். தொழில், வியாபாரத்தில் பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். எதிர்பாராத திருப்பத்தால் பொருள் வரவு கூடும். குடும்பத்தில் சுப காரிய முயற்சிகள் கை கூடி மகிழ்ச்சி கிட்டும். பெண்களுக்கு பொன், பொருள் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.



**கடகம்:** அனுகூலக் காற்று எல்லாத் திசையிலேயும் வீசினாலும், செலவினங்கள், அதிகமாகி கொஞ்சம் தடுமாற வைக்கிற வாரம். சிக்கனமும் எச்சரிக்கையும் பிரச்னைகளைத் தீர்க்கும், கவனமா இருங்க. தெய்வ பலத்தைக் கூட்டிக்கிறதால பல சிக்கல்கள்லேருந்து விடுபடலாம். ஆபீஸ்ல எதிர்பாராத திருப்பங்கள் சிலது காத்திருக்கு. கவனமா இருந்தா அத்தனையும்

**16.3.2005 முதல் 22.3.2005 வரை**



**வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க, 'நடக்குமென்பார் நடக்கும்' பகுதி, வரும் தமிழ்ப் புத்தாண்டு முதல் புது வடிவம் பெறுகிறது. ஜோதிடம் என்பது விஞ்ஞானமும், கணிதமும் இணைந்த ஒரு கலை என்பதை நிரூபிக்க வருகிறார், இளைய தலைமுறை ஜோதிடர் தஞ்சை பரத்வாஜ்.**

அனுகூலமாயிடும். தொழில், வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படற நேரம். வரவேண்டிய பாக்கிகள் வந்து சேரும். கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில் அமைதியும், நிம்மதியும் நிலவும். பெண்களுக்கு மன நிம்மதி தரும் வாரம்.



**சிம்மம்:** இதுவரை தடங்கல்கள், எதிர்ப்புகள்னு தடைப்பட்டுப் போன உங்க சகல காரியங்களும், குரு பகவான் - புதன் பரிவர்த்தனையால நல்லபடியா முன்னேற்றப் பாதையில் நடக்க ஆரம்பிச்சடும். தெய்வ பலமும், தெய்வீக ஈடுபாடும் உங்க பலத்தைக் கூட்டும். ஆபீஸ்ல எல்லாவகையிலும் அனுகூமான சூழ்நிலை உருவாகும். இதுவரை நிறைவேறாமலிருந்த உங்க கோரிக்கைகள் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில் எதிர்பாராத தனலாபம் ஏற்படும். வரவேண்டிய பாக்கிகள் வந்து சேரும். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். குடும்பத்தில் கணவன் - மனைவி ஒற்றுமையும், உடன்பிறந்தவர்கள் ஆதரவும் ஏற்படும். பெண்களுக்கு மகிழ்ச்சிகரமான வாரம்.



**கன்னி:** புதிய அறிமுகங்கள், முக்கியஸ்தர் ஆதரவுன்னு உற்சாகமும், தெம்பும் கூட்டுற வாரம். தேவைக்கேற்ற பணவசதியும், வெளி நாட்டுத் தொடர்பால் அனுகூலமும் கிட்டும். ஆபீஸில் இதுவரை இருந்த குழப்பங்கள், பிரச்னைகள் அனைத்தும் நீங்கி அனுகூலம் சேரும். தொழில், வியாபாரத்தில் இதுவரை இருந்த நெருக்கடி குறையும். கொடுக்கல், வாங்கல் கை கொடுக்கும். வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். குடும்பத்தில் எதிர்பாராத சுபச் செலவு ஏற்படும். கருத்து வேறுபாடுகள் மறைந்து ஒற்றுமை கூடும். ஆரோக்கிய மேன்மை, விருந்து, கேளிக்கை என உற்சாக வாரமாக இருக்கும். பெண்களுக்கு எண்ணங்கள் ஈடேறும்.



**துலாம்:** தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு கூடறதால தெளிவான மன நிலை கிட்டும். தாமதமாகி வந்த காரியங்கள் முன்னேறும். பயணங்கள் சில செல்ல நேரிடும். அதனால் அனுகூலமான திருப்பங்கள் ஏற்படும். ஆபீஸ்லயும் இது மிக மிக அனுகூலமான வாரம். திறமையும், அறிவாற்றலும் கூடி, கடினமான வேலைகளையும் முடித்து பாராட்டு பெற்றுத் தந்து உங்களை மகிழ்ச்சியாக்கும். உங்கள் நீண்ட நாள் கோரிக்கைகள் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். கடன் தொல்லை மறையும். குடும்பத்தில் ஒற்றுமை பலப்படும், மகிழ்ச்சி கூடும். பெண்களுக்கு உறவினர் வருகையால் உற்சாகம் கூடும்.



**விருச்சிகம்:** துணிவும், தன்னம்பிக்கையும் கூடி உங்க எல்லாக் காரியங்களையும் வெற்றி தேடித் தரும் வாரம் இது. தாராளமான பணவசதியும், விஐபிக் களோட ஆதரவும் கிடைக்கும். எதிர்பாராத பயணம் ஒண்ணும் காத்திருக்கு. ஆபீஸ்ல கடினமா உழைக்க வேண்டி வந்தாலும், அதற்கேற்ற பாராட்டும், பலனும் கிடைக்கும். உங்களது கோரிக்கைகள் நிறைவேறும். என்றாலும் எல்லாக் காரியங்களிலும் பொறுமையையும், நிதானத்தையும் கடைப்பிடிப்பது வெற்றி தேடித்தரும். தொழில் வியாபாரத்தில் ஏற்றமான வாரம். நெருக்கடிகள் தீர்ந்து நிம்மதி கிட்டும். குடும்பத்தில் மகிழ்ச்சியும், ஒற்றுமையும் கூடும். பெண்களுக்கு சுபகாரியங்களில் ஈடுபடும்

சந்தர்ப்பங்கள் மகிழ்ச்சி கூட்டும்.



**தனுசு:** சில முக்கியக் காரியங்களில் தடைகள், தாமதம் என நேரிட்டாலும் இறுதியில் நல்ல விதமாகவே முடியும். செலவினங்கள் கூடுமென்பதால் எச்சரிக்கையாகவும், சிக்கனமாகவும் இருப்பது நல்லது. புதியவர்களிடம் பழகும் போது இருமடங்கு எச்சரிக்கை அவசியம். பேச்சில் கடுமை கூடாது. ஆபீசிலும் சுமுகமான போக்கை கடைப்பிடிப்பது நல்லது. தொழில், வியாபாரத்தில் புதிய செலவுகள் ஏற்படும். வாரக்கடைசியில் நிலைமை சீராகும். புதிய தொழில் தொடங்குவதை தள்ளி வைப்பது உசிதம். குடும்பத்தில் இதுவரை இருந்த சங்கடங்கள் மெல்ல விலகும். குலதெய்வப் பிரார்த்தனை ஏதுமிருந்தால் நிறைவேற்றுவது குறைகளைத் தீர்க்கும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கையால் மகிழ்ச்சி ஏற்படும்.



**மகரம்:** தெய்வ பலமும், தெளிவான மன நிலையும் சகல காரியங்களிலும் வெற்றி தேடித் தரும். புதிய அறிமுகங்கள், ஸ்தல யாத்திரை, தாராள பண நடமாட்டம் ஏற்படும். பிரபு தனவான்களின் ஆதரவு கை கொடுக்கும். ஆபீஸில் எதிர்ப்பு விலகும். அனுகூலமான திருப்பங்கள் சில நேரிடும். தாமதமாகி வந்த கோரிக்கைகள் நிறைவேறும். தொழில், வியாபாரத்தில் உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். புதிய தொழில் முயற்சி வெற்றி பெறும். கொடுக்கல், வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில் தாமதமாகி வந்த சுபகாரியங்கள் நிறைவேறும். வீடு, வாகனம், சொத்து சேர்க்கை ஏற்பட்டு குடும்பத்தில் மகிழ்ச்சி கூடும். பெண்களுக்கு உடன்பிறந்தவர்களால் நன்மை கிட்டும்.



**கும்பம்:** தெய்வபலம், நல்லவர்கள் ஆதரவு என்று உங்க பலம் கூடி, எல்லாக் காரியங்கள்லயும் வெற்றி தேடித் தரும். குலதெய்வப் பிரார்த்தனை நிறைவேற்றுவது உங்களுக்கு நன்மை சேர்க்கும். தேவைக்கேற்ற பண வசதி உண்டாகும். ஆபீஸில் அனுகூலமான திருப்பங்கள் சில ஏற்படும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு சிலருக்கு ஏற்படும். உங்கள் திறமை பாராட்டும், அங்கீகாரமும் பெறும். தொழில், வியாபாரத்தில் போட்டிகள் மறையும். கூட்டுத் தொழில் லாபம் பெற்றுத் தரும். வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலமாகும். குடும்பத்தில் அமைதியும், நிம்மதியும் நிலவும். நெருக்கடி நீங்கி சுபிட்சம் ஏற்படும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.



**மீனம்:** தாராளமான பண நடமாட்டமும், வி.ஐ.பிக்கள் ஆதரவும் உங்க உற்சாகத்தைக் கூட்டும். தெய்வீகக் காரியங்களில் ஈடுபாடு கூடும். வெளிநாட்டிலிருந்து உறவினர், மக்கள் வருகை மகிழ்ச்சி கூட்டும். ஆபீஸில் சிறப்பான வாரம். இதுவரை நிலவிய குழப்பம், பிரச்னைகள் நீங்கி சாதகமான சூழல் ஏற்படும். நீண்ட நாள் கோரிக்கைகள் நிறைவேறும். பதவி உயர்வு, இடமாற்றம் சிலருக்கு ஏற்படும். தொழில், வியாபாரத்தில் நெருக்கடிகள் சில ஏற்படலாம், எச்சரிக்கை. கொடுக்கல், வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில் குதூகலம் நிலவும். சுபகாரிய முயற்சிகள் ஈடேறும். கருத்து வேறுபாடுகள் நீங்கி ஒற்றுமை ஏற்படும். பெண்களுக்கு ஆடை ஆபரணச் சேர்க்கை மகிழ்ச்சி ஏற்படுத்தும்.

**உங்கள் எதிர்காலம், தொழில், திருமணம், படிப்பு என்று எந்த சந்தேகமானாலும், எந்தக் குறையாயிருந்தாலும், எழுதியனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசம், தொலைபேசி எண் இவற்றுடன், உங்கள் ஜாதகத்தின் நகலையும் கட்டாயம் அனுப்ப வேண்டும்.**

**உங்கள் சந்தேகங்களுக்கு விடையும், குறைகளுக்கு நிவர்த்தியும் கூறத் தயாராக இருக்கிறார் தஞ்சை பரத்வாஜ்.**

# இந்தியாவின் 'மாதிரி

● கே. தெய்வசிகாமணி, சென்னை - 30

? பசு மாட்டுச் சிறுநீரில் ஷேவிங் லோஷன் தயாரிக்கப்பட்டு, அதையும் அதுபோன்ற பொருள்களையும் விற்க டெல்லி பா.ஜ.க ஆபீஸில் ஒரு கடை திறக்கப்பட்டிருப்பது பற்றி...?

! ஹையோ பாவம், பசுமாடு!



• இரட்டிப்பு ...



• ... பெருமை...!

● என். மாணிக்கம், பின்னல்

? ஆணும் பெண்ணும் சமம் என்னும்போது பெண்களுக்கு மட்டும் சிறப்பு வருமான வரிச் சலுகை தேவையா?

! பெண்களின் வோட்டுக்களைப் பெறத் தேவை. வரிச் சலுகையின் அளவுக்கு குடும்ப வருமானம் அதிகரிக்கும் என்பதால், ஆண்களுக்கும் திருப்தியே! இந்தச் சுயநல நோக்கில் பறிகொடுக்கப்பட்டது சமத்துவம் என்ற தத்துவம்.

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8

? அரசு டாஸ்மாக் மூலம் மது விற்பனை செய்ததால் ஆயத் தீர்வையாக 1295.4 கோடி ரூபாய் கூடுதலாக வருமானம் கிடைத்ததாமே. இதை ஒரு சாதனையாக அரசு கூறிக் கொள்ளலாமா...?

! அந்த அளவுக்கு மக்களின் ஆரோக்கியத்துக்கு அரசாங்கமே கேடு விளைவிப்பதையும், அந்த அளவுக்குப் பெண்களின், குழந்தைகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதையும் சேர்த்தால் மும்மடங்கு சாதனை!

• ஒரு நாள் வாழ்வு!



• வேஸ்ட் வேலை!



● எச். ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

? 'மக்கள் கூடும் இடங்களில் ஆங்கிலச் சொற்களுக்கு உரிய தமிழ்ச் சொற்கள் அடங்கிய பெயர்ப் பலகைகள் வைக்கவுள்ளோம்' என்ற டாக்டர் ராமதாஸின் செயலை வரவேற்கலாம் அல்லவா?

! வேஸ்ட்டான வேலை. க்ரீன்வேஸ் ரோட் என்பதை 'பசுமை வழிச்சாலை' என்று சென்னையில் அபத்தமாக மொழி பெயர்த்து வைத்துள்ளதுபோல் மேலும் பல அபத்தங்கள்தான் நிகழும்.

● நகை. இ. மகராசன், சின்னமனூர்

? 'குஜராத் கலவரத்தின் பின்னணியில் மத்திய மாநில அரசுகளின் சதி இருந்தது' என கே.ஆர். நாராயணன் கூறியிருக்கிறாரே?

! சதி என்ற சொல்லை அவர் பயன்படுத்தியதாகத் தோன்றவில்லை. 'அன்றைய பிரதமர் வாஜ்பாய் தாம் கேட்டுக் கொண்ட பிறகும் கூட நடவடிக்கை எடுக்கத் தவறிவிட்



# நீங்கள் கேட்டவை - ஹாசு

டார்' என்றுதான் சொன்னார். லேட்டஸ்டாக, 'சர்ச்சை அடங்கட்டும்' என்று கூறி தண்ணீர் தெளித்தும் விட்டார்.

● ராஜ்குமார், மாரம்பாளையம்
(காரப்பாடி அஞ்சல்)

? நமது சாந்தா ஷீலா நாயர், கலெக்டர் ராதாகிருஷ்ணன் ஆகிய இருவரையும் இலங்கையில் நிவாரணப் பணி அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிக்க வருமாறு இலங்கை அரசு கோரியிருக்கிறதே... இது நம் நாட்டுக்குப் பெருமைதானே?

! நாட்டுக்குப் பெருமை. தமிழகத்துக்கு இரட்டைப் பெருமை!

● க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

? 'தமிழ் மீது உள்ள பற்றால்தான் வேறு மொழிப் படங்களில் நடிக்கவில்லை' என்று விஜயகாந்த் கூறுவது எதைக் காட்டுகிறது!

! வேறு மொழிகளில் நடிக்க தமக்கு எத்தனை வாய்ப்புகள் வந்தன, நிராகரித்தார் என்பதைக் கூறியிருக்கிறாரோ?

● ஆர். சுகிர்தா, சென்னை - 23

? பெண்களுக்கு எதிரான வன்முறைகளுக்கு நிரந்தரத்

## மாநிலம் எது..?

தீர்வு அன்பு வழியா? அடக்குமுறையா?

! அறிவுப் பாதை.

● கவிதா ராஜேஸ்வரி, எகனை (பெரம்பலூர்)*

? 'தி.மு.க கூட்டணி உடையாமல் சட்டசபை தேர்தலைச் சந்திக்கும்' என்று நினைக்கிறீர்களா...?

! நம்புகிறேன்; காரணம், மத்தியில் மன்மோகன் சிங் ஆட்சி அடுத்த தேர்தல் வரை நிலைக்க வேண்டும் என்ற கட்டாயம் கூட்டணிக் கட்சிகளுக்கு இருக்கிறது.

● எம். அசோக்ராஜா,
திருச்சி - 15

? 'ராம காவியம் மனித வாழ்வுக்கு எடுத்துக்காட்டு' என்கிறாரே வைகோ...?

! சொல்பவர் வேண்டுமானால் புதுசாக இருக்கலாம். சொல்லும் விஷயம் பழசுதான். அஸ் ஓல்ட் அஸ் ராமாயணம்!

● பாலகிருஷ்ணன்,
மதுரை - 1

? 'ம.தி.மு.க.வின் எதிர்காலம் சிறப்பாக இருக்க வேண்டும் என்ற அக்கறை கலைஞருக்கு இருப்பதால் அதற்கேற்றாற்போலவே அவருடைய செயலும் அணுகுமுறையும் இருக்கும்' என்ற வைகோவின் நம்பிக்கை பற்றி...?

! அவர் நீறு பூத்த நெருப்புங்க; அம்புட்டுத்தான் சொல்ல முடியும். மற்றதை நீங்களே புரிஞ்சுக்கிட வேண்டியதுதான்!

● ரா. சாலமோன்,
ஆலங்குளம்

? 'இந்தியா ஒளிர்கிறது' என்று நாங்கள் தேர்தலின்போது போட்ட கோஷம் பொருத்தமானது அல்ல' என்று அத்வானி இப்போது சொல்கிறாரே?

கோஷம் சரியானதே. அந்த

* பழைய கதை!　　* ஃபெயில் மார்க்!







● பெண்கள் பட்ஜெட்

நம்பிக்கையை ஊட்டுவதில் தவறில்லை. ஆனால் அதற்குக் கோடிக் கணக்கில் தேர்தல் சமயத்தில் மக்கள் வரிப்பணத்தை வீணடித்ததுதான் தப்பு. கட்சிப் பணத்தைச் செலவிட்டிருந்தால் யாருமே தட்டிக் கேட்டிருக்க மாட்டாங்க. இப்போ அத்வானியின் பேச்சு, பூசி மெழுகுவதாக அல்லவா இருக்கிறது!

● அ. கஹைல் ரஹ்மான், திருச்சி - 2

? 'கார்கில் யுத்தம் இந்தியாவுக்குப் பாடம் புகட்டியது' என்று முஷாரஃப் கூறியிருப்பதை எதைக் காட்டுகிறது?

! முஷரஃப் இன்னும் பாடம் கற்கவில்லை என்பதை.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? தமிழ்நாடு பட்ஜெட் மக்களுக்கு அரசு அளித்துள்ள "மலர்க்கொத்து" என்கிறாரே முதல்வர்.

! மலர்க்கொத்தை ஒருநாள் பார்த்து மகிழலாம். மறுநாளே வாடிவிடும். அது வயிற்றுப்பாட்டுக்கும் வழி செய்யாது! மலர்க் கொத்துக்குப் பதில், வேலை வாய்ப்புப் பெருக்கம் என்ற மண்வெட்டி அல்லது ஸ்பேனரை மக்கள் கையில் கொடுத்தால், அவர்களுக்கு ஊதியமும் கிடைக்கும், நாட்டுக்கு வளர்ச்சியும் ஆயிற்று!

● வசீகரன், சென்னை 18

? சினிமாவால் சமூகத்தைத் திருத்த முடியுமா...?

! திருத்த முடியாது; திருத்துவதற்காக ஏற்பட்ட சாதனமல்ல அது என்பது சினிமாத் துறையினரின் நொண்டிச் சமாதானம். சினிமா, டி.வி இவற்றின் மோசமான பாதிப்பால் சமுதாயக் கேடுகள் விளைகின்றன என்பது, இன்று நிரூபிக்கப்பட்ட உண்மை. அப்படியானால் ஆரோக்கியமான சினிமா, டி.வி நிகழ்ச்சிகளால் நற்பயன் ஏற்பட முடியும் என்பதும் உண்மையாகத்தானே இருக்க முடியும்!

● எல். ராமச்சந்திரன், சென்னை - 5

? இந்தியாவில் 'மாதிரி' மாநிலம் எது? 'ஒரு மாதிரி' மாநிலம் எது...?

! ஒரு மா...திரிக்கு 'மாதிரி'யாக ஆக்கப்பட்டுவிட்ட லல்லுவினுடைய மாநிலம்தான்.

● ஆர். விஸ்வநாதன், சென்னை - 4

? நடைபெற்ற சட்டமன்ற தேர்தல் முடிவுகள் குழப்பத்தை உருவாக்கிய காரணத்தால் ஜனநாயக அமைப்பே கேள்விக்குறியாகி விட்டதே...?

! ஜனநாயக அமைப்பு சரியாகத்தான் இருக்கிறது. அரசியல் கட்சிகள்தான் ஒத்திசைவின்றி இயங்கி காரியத்தைக் கெடுக்கின்றன.

● எஸ். சக்தி, விக்கிரமசிங்கபுரம்

? சட்டமன்றத்தில் எதிர்கட்சியினரைச் சகட்டுமேனிக்கு விமர்சிக்கிறாரே ஜெ... இது அவரது பதவிக்கு அழகா...?

! விமர்சனம் கொள்கை அடிப்படையில் இருந்தால் அழகு; காழ்ப்புணர்ச்சியுடன் தனி நபர் தாக்குதல் என்ற உள்நோக்கத்துடன் அமைந்தால் அசிங்கம். இந்த அடிப்படையில் இரு தரப்பு விமர்சனங்களையும் எடை போடுங்களேன்!

**□ ரூ 100 பரிசு பெறுபவர்:**

**ஜே.வி.ஜே. கண்ணன்,**
**515, பெரியகடை வீதி!**
**திருச்சி 620 008**

**★ ரூ 50 பரிசு பெறுபவர்:**

**கவிதா ராஜேஸ்வரி,**
**எகனை**
**621 219**



## ஆசிரியர் பக்கம்

# ஆரோக்கியம் வாங்கலியோ ஆரோக்கியம்!



திருப்பூரில் பின்னலாடைத் தொழில் கொழித்ததன் பக்க விளைவாக, சுற்றுச்சூழல் மாசு பெரிய பிரச்னையாகியிருக்கிறது. சாயப் பட்டறைகள் வெளியேற்றும் நீர், நிலத்தடி ஆதாரங்களில் நச்சு சேர்த்து வருகிறது. யாவரும் அறிந்த இந்தப் பிரச்னை போதாதென்று, யாரு மறியாமலும் அங்கே ஒரு சீர்குலைவு நிகழ்ந்து வருவதைச் சமீபத்தில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

'வழிகாட்டி' என்ற மன நல ஆய்வு அமைப்பு நிகழ்த்திய இரண்டு நாள் முகாமில், பல்வேறு தரப்புகளைச் சேர்ந்த திருப்பூர்வாசிகளிடம் கலந்துரையாடி கண்டு பிடித்துள்ள விஷயம்: அவ்வூர் மக்களில் கணிசமானோர் மன அழுத்தம், மனச் சோர்வு மற்றும் கவலைகளைத் தீவிரமாகச் சுமக்கும் நோயாளிகளாக மெள்ள மாறி வருகிறார்கள்!

காரணம்...?

தொழில் நகரமான திருப்பூர், ஏற்றுமதி ஆர்டர்களை நம்பித்தான் பெரும்பாலும் இயங்குகிறது. ஏற்றுமதித் தேவைகள் திடீர் திடீர் என்று அதிகரிக்கும். காலக் கெடுவுக்குள் சப்ளை செய்யா விட்டால் ஆர்டர் ரத்தாகி விடும்! இதனால் தொழிலாளிகளும் முதலாளிகளும்கூட மிகுந்த மன அழுத்தத்துக்கு உள்ளாகிறார்கள். அது மட்டும் அல்ல... காலக் கெடுவுக்குள் பணியை முடிக்க இரவு பகலாக உழைத்து, உடல் நலனையும் கெடுத்துக் கொள்கிறார்கள். நல்ல சம்பளம் வாங்கினாலும், மாசுற்ற சுற்றுச்சூழலில் மோசமான தண்ணீர் வசதியிடையே வாழ்ந்து அவதியுறுகிறார்கள். மன அழுத்தம் காரணமாகப் பலர் மதுவை நாடி, அதற்கு அடிமையும் ஆகி விடுகிறார்கள்.

"திருப்பூருக்கு உடனடியாக மனவியல் நிபுணர்களின் உதவி தேவை'' என்கிறார் டாக்டர் செல்வராஜ் (தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ், மார்ச் 7)!

பக்க விளைவுகளைப் பற்றிச் சிந்திக்காமல் களத்தில் இறங்கிவிட்டதால், டாலர்களுடன் பிரச்னைகளையும் சேர்த்துச் சம்பாதித்து வருகிறோம்.

இதற்கு மறுபுறமாக, மற்றொரு துறையில், ஏற்றுமதிக்கான வளமான சாத்தியக் கூறுகள் இருப்பதை, அரசும் தனியாரும் சமீபத்தில் உணர்ந்து விழித்துக் கொண்டுள்ளனர். "மெடிகல் டூரிஸம் மூலம் அன்னியச் செலவாணி அள்ளப் போகிறது இந்தியா'' என்று மகளிர் தினத்தன்று முழங்கியிருக்கிறார் மத்திய சுற்றுலாத் துறை இணை அமைச்சர் ரேணுகா சௌத்ரி.

அதாவது, நோய் சிகிச்சைக்காக மட்டுமின்றி, அழகு சிகிச்சைக்காகவும், அமைதி (மன) சிகிச்சைக்காகவும் இந்தியா வரும் பயணிகளை வரவேற்று ஆயுர்வேத மஸாஜையும் யோகாவையும் அறிமுகப் படுத்துவோம். இதன் மூலம் பத்தாயிரம் கோடி ரூபாய் வரையில் டர்ன் ஓவர் கிடைக்கும் என்பது, இந்திய தொழில் கூட்டமைப்பின் (சி.ஐ.ஐ) மண்டலத் தலைவியான ஷோபனா கமினேனியின் எதிர்பார்ப்பு. இத்துறையில் இந்தியா உலக முன்னோடியாக விளங்கும் என்பது, அப்போலோ ஹாஸ்பிடல் சேர்மன் பிரதாப் ரெட்டியின் கணிப்பு.

"ஆரோக்கியம் வாங்கலியோ, ஆரோக்கியம்!'' என்று கூவி, விற்கப் போகிறோம். திருப்பூர் வாசிகள் காதிலும் அது விழாதா என்ன!

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் 19

எத்தனையோ தப்பு பண்ணுகிறோம் இந்த பூமியிலே. ஆனால், பூமாதா நாம் பண்ணுகிற தப்பையெல்லாம் எடுத்துச் சொல்வதில்லையாம் பகவானிடத்திலே. ஏதாவது ஒரு நல்லது பண்ணினோமானால், அதைத்தான் மிகைப்படுத்திச் சொல்லுவாளாம்.

'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல' என்ற வசனம் வேத வாக்கியத்திலிருந்து தோன்றியதுதான்.

நாம் ஒரு மேலான இடத்திலே படுத்து உறங்குகிறோம். எழுந்ததும் முதலில் பூமாதா மீதுதான் காலை வைக்கிறோம். ஆகவே, அதிகாலை எழுந்ததுமே பூமாதாவைத் தொழ வேண்டும்.

“அம்மா! மஹா பாபி நான்... இன்றைய தினம் என்ன பாவத்தைப் பண்ணப் போகிறேனோ...? நேற்றே நிறைய பண்ணி விட்டேன்; இன்றைக்கு என்ன பண்ணுவேன் என்று தெரியாது. உன் மேல் காலை இப்போது வைக்கப் போகிறேன். நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்” என்று முதலில் அவளிடத்திலே கேட்டுக்கொள்ள வேண்டும்.

***துப்யம் தேஹி வஸுந்தரே***
***பாத ந்யாஸம் க்ஷமஸ்வமே***

- 'என்னுடைய பாத நியாஸத்தை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்' என்று கேட்க வேண்டும்.

அதனால்தான், பகவானை முதலில் எழுப்புகிறபோது, “கௌசல்யா சுப்ரஜா ராமா” என்று சுப்ரபாதத்தைச் சொல்லி, பூஜைப் பெட்டியைத் திறக்க வேண்டும். திறந்துவிட்டு மூன்று முறை கையைத் தட்ட வேண்டும். காலைக் கடனை முடிப்பதற்காக பூமியை நோக்கிப் போகிறோம். அப்போது, “அம்மா, பூமாதா! இந்த இடத்தை நான் அசுத்தி பண்ணப் போகிறேன். இதைவிட்டு நீ நகர வேண்டும்” என்று பிரார்த்திக்க வேண்டும். அப்புறம் மூன்று தடவை கைதட்ட வேண்டும். இதற்கு வேறு மாதிரி தட்ட வேண்டும். பகவானை எழுப்புகிறபோது வேறு மாதிரி தட்ட வேண்டும். தட்ட வேண்டிய முறைகள் என்ன என்பதை பெரியோர்களுடைய அனுஷ்டானத்தைப் பார்த்துதான் கற்றுக் கொள்ள வேண்டும்.

அர்க்கியம் விடுகிறபோது கீழே பூமி சுத்தமாக இருக்கிறதா என்று பார்த்துத் தான் விடவேண்டும். கீழே அர்க்கியம் விட வேண்டிய இடம் அசுத்தியாக இருந்தால், அதை முதலில் சுத்தம் பண்ணிக் கொள்ள வேண்டும்; அப்புறம்தான் அங்கே அர்க்கியம் விடலாம்!

இப்படியெல்லாம் செய்ய வேண்





டும் என்பதை மகான்களைப் பார்த்துத் தான் நாம் தெரிந்து கொள்ள முடியும். அப்பொழுதுதான் அதிலே கொஞ்சமாவது நாம் செய்ய முடியுமா என்று பார்க்கலாம்.

'சுபாஷித நீவி' என்ற பிரபந்தத்தில் சுவாமி தேசிகன் அழகாகப் பேசினார்:

'பெரியோர்கள் பண்ணுவது அத்தனையையும் நாம் பண்ணிவிட முடியாது. ஆனால், அதில் கொஞ்சமாவது பண்ண முடியுமா என்று பார்க்க வேண்டும்' என்றார்.

அகஸ்தியர் இருக்கிறாரே, அவர் என்ன பண்ணினார்... "அச்சுதாய நம:" என்று ஒரு தடவையிலேயே சமுத்திர ஜலம் மொத்தத்தையும் ஆசமனம் பண்ணிவிட்டார்!

ஆசமன தீர்த்தம் என்பது ஒரு உளுந்து அமிழ்கிற அளவுக்குத்தான் இருக்க வேண்டும். தாகம் எடுக்கிறது என்பதற்காக நிறைய தீர்த்தத்தைக் கையிலே சேர்த்து 'அச்சுதாய நம:', 'அனந்தாய நம:' என்று சாப்பிடக் கூடாது! கொஞ்சமாகத்தான், அதுவும் எச்சில் ஆகாமல், உதட்டில் படாமல், ரொம்ப ஜாக்கிரதையாக ஆசமனம் பண்ண வேண்டும். உட்கார்ந்து கொண்டு ஆசமனம் பண்ணலாம்; நின்று கொண்டு பண்ணக் கூடாது. நுரையாக இருக்கிற ஜலத்தில் பண்ணக் கூடாது. 'குளிர் காலமாக இருக்கிறதே, வெந்நீரில் பண்ணலாமா?' என்றால், கூடாது.

கிழக்கு திக்கை நோக்கி உட்கார்ந்தோ, அல்லது மேற்கு திக்கை நோக்கி உட்கார்ந்தோ பண்ணலாமேயொழிய, மீதி திக்குக்கெல்லாம் ஆசமனம் விதிக்கப்படவில்லை.

உளுந்து அமிழ்கிற அளவு ஜலம்தான் என்று சாஸ்திரம் சொல்கிறது அல்லவா...? அகஸ்தியருக்கு, அந்த சமுத்திரமே அப்படி உளுந்து அமிழ்கிற அளவு சொட்டு ஜலமாகத் தோன்றிவிட்டது; அமைந்து விட்டது.

மகான்களைப் பார்த்து நாம் கற்றுக் கொள்ளவேண்டும் என்பதற்காக, நாமும் அகத்தியரைப் போல் சமுத்திர ஜலம் மொத்தத்தையும் ஆசமனம் பண்ண நினைத்தால் இயலுமா...?

அவர் அப்படிப் பருகிவிட்டாரே என்று மேகங்களெல்லாம் என்ன பண்ணின, நேரே சமுத்திரத்துக்கு மேலே போய், 'நாமும் அப்படிப் பண்ணவேண்டும்' என்று சமுத்திர ஜலத்தை இழுத்துக் கொண்டன. மொத்த ஜலத்தையும் இழுத்துக் கொண்டு கறுத்துப் போயின! ஒரு காற்றடித்தவுடனேயே, நேராக அவை பூமண்டலத்துக்கு மேலே வந்துவிட்டன. மறுபடியும் மழையைப் பொழிந்தன. வெளுப்பாக மாறின. மறுபடியும் சமுத்திரத்துக்கு மேலே போய், மறுபடியும் நீரை உறிஞ்சி, மறுபடியும் மழையாகப் பொழிந்து... இதே மாதிரி இன்றைக்கு வரைக்கும் அதையே பண்ணிக் கொண்டிருக்கின்றன மேகங்கள்! ஆனால் ஒரு நாளும் இந்த மேகங்களால் அகஸ்தியர் ஆக முடியாது. வெளுப்பாக இருக்கிற மேகம் கறுப்பாக மாறுகிறதேயொழிய,

# குறையொன்றுமில்லை



அதனால் அகஸ்தியர் ஆக முடியவில்லையே!

அகஸ்தியர் அப்படிப் பண்ணினார் என்பதற்காக, நாமும் அப்படியே பண்ணினால் முடியுமா! நம்மால் என்ன முடியுமோ அதைத்தான் நாம் பண்ணலாம்.

இப்படி ஒவ்வொன்றையும் நாம் பார்க்கிறபோது, ஆசார்யர்கள், பெரியவர்கள் காட்டிய வழியிலே செய்யவும் வேண்டும். அவர்கள் அளவுக்குச் செய்ய இயலவில்லை என்று எண்ணவும் கூடாது.

பூமாதாவிடம் எப்படிப் பேச வேண்டும் என்று பார்த்தோம்.

கந்தவதி ப்ருத்வி - பூமாதா எவ்வளவு ஏற்றம் உடையவள்! நம்மைத் தாங்கிக் கொண்டு, எத்தனையோ பொக்கிஷங்களையெல்லாம் உள்ளே வைத்துக் கொண்டு, கருணை புரிகிறாள்.

சாந்தோக்ய உபநிஷத், 'ஹிரண்ய நிதி' என்று குறிப்பிடுகிறது. உபரி உபரியாகப் புதையல் இருக்கிறது பூமிக்குள்ளே. ஆனால் அதற்கு மேலே ஒருத்தர் நடந்து போய்க் கொண்டிருக்கிறார். எத்தனையோ உத்தமமான தன்மைகளெல்லாம் இருக்கின்றன, குணங்களெல்லாம் இருக்கின்றன. மேலே நடப்பவன் அதை உணர்வதில்லை. சர்வாந்தர்யாமியாக பகவான் இருக்கிறான். அதையும் உணர்வதில்லை. அஞ்ஞானியாக, எப்படி கண் மூடித்தனமாக அவர் மேலே நடந்து கொண்டிருக்கிறாரோ, அந்த மாதிரிதான் உண்மைப் பொருளை அறியாமல் நடந்து கொண்டிருக்கிறோம் நாம்.

இதே மாதிரி ப்ருஹதாரண்யக உபநிஷத் சொல்கிறபோது, 'எவனொருவன் பரப்பிரும்மத்தை உணராமல், தத்வங்களை உணராமல் மாண்டு போகிறானோ, அவனுக்கு 'கிருபணன்' என்று பெயர் எனச் சொல்கிறது. பரப்பிரும்மத்தை, தத்வங்களை உணர்ந்தவனுக்கு பிராமணன் என்று பெயர். யார் பிராமணன், யார் கிருபணன் என்று பார்த்தால், தத்துவங்களையெல்லாம் உணர்ந்து, இதற்கெல்லாம் பொருளாக விளங்கக் கூடியவன் எம்பெருமான் என்கிற ஞானத்தோடு எவன் மரிக்கிறானோ, அவன்தான் பிராமணன். - விஷயத்தை உணர்ந்தவன்.

உணராமலேயே இருந்து விட்டானானால், மற்றைய பிராணி வர்க்கங்களைப் போல் வாழ்ந்துவிட்டானானால் கிருபணன்.

கிருபண சுவபாவம் கார்பண்யம். 'கார்பண்ய தோஷ சுவபாவம்...' - அர்ஜுனன் பகவானிடம் சொல்கிறான்: "கார்பண்ய தோஷத்தினால் நான் இதையெல்லாம் உன்னிடம் கேட்கிறேன்; அஞ்ஞானத்தினால் கேட்கிறேன்; ஒன்றும் தெரியவில்லை எனக்கு, ஞானமே இல்லை" என்று சொல்லி பகவானை வேண்டிக் கொண்டான்.



அந்த மாதிரி, தத்துவங்கள்
குறித்த ஞானம், பஞ்ச பூதங்கள்
எப்படி எப்படி உண்டாயின
ஒன்றிலிருந்து ஒன்றாக எப்படி
தோன்றின, ஒவ்வொன்றினு
டைய தன்மை இப்படியிப்படி
இருக்கும் என்ற ஞானம் அவசி
யம்.

திருச்சந்த விருத்தம் என்கி
பிரபந்தத்திலே திருமழிசை
யாழ்வார் அழகாகச் சொ
கிறார்:

பூ நிலாய ஐந்துமாய்
புனற்கண் நின்
நான்குமாய்
தீ நிலாய மூன்றுமாய்
சிறந்த கா
இரண்டுமாய்

மீ நிலாயது ஒன்றும் ஆகி
வேறு வேறு தன்மையாய்
நீ நிலாய வண்ணம்
நின்னை யார்
நினைக்க வல்லரே!

மொத்தம் ஒரே எண் கணித சாஸ்திரம்! எல்லாம் எண்ணிக் கையிலேயே சொல்கிறார். நியூமராலஜி என்கிறார்களே, அந்த மாதிரி! அதிலே ஆழ்வார் அழகாக எடுத்துக் காட்டினார். பகவானே அனைத்துக்கும் ஆதாரம் என்று எடுத்துக் காட்டினார். அவருக்கு மூலம் எது என்று கேட்டால், வேதம்தான் சமகம் என்கிற மந்திரத்திலே வருகிற வேண்டுதல்கள்.

'ஒன்று எனக்கு வேண்டும்; மூன்று எனக்கு வேண்டும்', என்று ஒற்றைப்படை எண்களையெல்லாம் முதலில் சொல்கிறது சமகம். அப்புறம் 'இரட்டைப் படை எல்லாம் எனக்கு வேண்டும்' என்று அந்தந்த தேவதைகள், தேவதைகளுக்குட்பட்ட விஷயங்கள் எல்லாம் சித்திக்க வேண்டும் என்று கேட்கிறது சமகம்.




இதே மாதிரிதான் ஆழ்வாரும் சொல்கிறார் - ஆகாசத்துக்கு ஒரு குணம், நீருக்கு ஒன்று என்று பஞ்ச பூதங்களின் குணங்கள் வேறு வேறு தன்மையாக அமைந்துள்ளன. அக்னி எரிகிறது என்றால், அதிலே ஜலத்தைக் கொட்டினால் அணைந்து போய்விடுகிறது. இப்படி எல்லா பூதங்களும் வெவ்வேறு தன்மையாகவும், வெவ்வேறு குணமுடையதாகவும் இருக்கின்றன. ஆனால், அவை எல்லாமும் நீயாகவே இருக்கிறாய்... இது எப்படி முடிகிறது?

மாயா வாமனனே! மதுசூதா!
நீ அருளாய்
தீ ஆய் நீர் ஆய் நிலன் ஆய்
விசும்பு ஆய் கால் ஆய்
தாய் ஆய் தந்தை ஆய் மக்கள் ஆய்
மற்றும் ஆய், முற்றும் ஆய்,
நீ ஆய், நீ நின்றவாறு - இவை என்ன
நியாயங்களே!

- நம்மாழ்வார் எம்பெருமானையே கேட்கிறார். ஆரம்பிக்கிறபோதே 'மாயா' என்று ஆரம்பிக்கிறார்! 'மாயமென்ன மாயனே!' என்கிறார்!

'மாயனை, மன்னும் வடமதுரை மைந்தனை' என்றாள் ஆண்டாள்.

இப்படி ஆழ்வார்கள், ஆசார்யர்களெல்லாரும் ஒரே 'மாயா' சப்தம் கொண்டு விவரிக்க முயற்சி செய்கிறார்கள் பகவானை. அந்த மாமாயனுடைய பெருமையை முழுதுமாக உணர முடியவில்லை.

(வளரும்)

# சின்மயி பாடகி மட்டுமல்ல!

மொழிகளை மனிதர்கள் வாழ வைத்துக் கொண்டிருக்கிறானோ இல்லையோ, மொழிகள் ஒரு மனிதனுக்கு பல வகையிலும் உதவிக் கொண்டிருக்கின்றன. உதாரணம் பாடகி சின்மயி. பிரபல தமிழ்ப் பாடகியான இவருக்கு அதுவே முழுநேரத் தொழிலல்ல. ஜெர்மன் மொழியில் டிகிரி முடித்து, ஒரு ஜெர்மன் கம்பெனியில் மொழி பெயர்ப்பாளராகப் பணி புரிகிறார். அடுத்ததாக ப்ரெஞ்ச், இத்தாலி என காட்டுவாசி பாஷைகளைத் தவிர உலகிலுள்ள சர்வதேச மொழிகளையெல்லாம் தேடிப்பிடித்து படிப்பவரிடம்... "என்னங்க இதெல்லாம்...?" என்றுதான் கேட்டோம். ஆரம்பித்து விட்டார் சுய புராணத்தை. (தமிழில்தான்!)

"லதா மங்கேஷ்கர், எஸ். ஜானகி மாதிரியெல்லாம் இசைத் துறையில் நீண்ட நாளைக்குத் தாக்குப் பிடிப்பது அபூர்வமாகிவிட்டது. அதனால் வேறு திறமைகள், வேறு தொழில்கள் கைவசம் இருப்பது காலத்தின் கட்டாயம்.

எனக்கு இந்தியக் கலைகள் பற்றிய ஆராய்ச்சியில் மிகவும் விருப்பம். நமது காவியங்களிலிருந்து அறிவியல் தொழில் நுட்பங்கள் வரை, ஜெர்மனைத் தழுவிக் கொண்டதால், எனது ஆராய்ச்சிக்கு ஜெர்மன் மொழி உதவும் என்று சென்னை மேக்ஸ்முல்லர் பவனில் அதைக் கற்றுக் கொண்டேன். இரண்டரை வருடங்களில் டிகிரி முடித்த பிறகு, இன்று சென்னையில் இயங்கிவரும் ஒரு ஜெர்மன் கம்பெனியில் ஜெர்மன் டு இங்கிலீஷ் மொழி பெயர்ப்பாளராக நல்ல சம்பளத்தில் வேலை செய்கிறேன்.

எனக்கு ஏற்கெனவே ஆறு இந்திய மொழிகள் தெரியும். என் திறமையைப் பார்த்து, இப்பொழுது அதே கம்பெனியில் என்னை ப்ரெஞ்ச் படிக்க சொல்லியதால், அலையன்ஸ் ப்ரான்ஸைஸில் ப்ரெஞ்சும் கற்றுக் கொள்கிறேன். மொழி பெயர்ப்பாளர் மார்க்கெட்டில் இத்தாலி, ஸ்பானிஷுக்கு நல்ல மார்க்கெட் உள்ளதால், அதையும் கற்றுக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். இதனால் உலகில் எங்கு சுற்றினாலும் கம்யூனிகேஷன் கேப் வராது இல்லையா?

தமிழைப் போலதான் ஜெர்மன் இலக்கணமும். இதனால் நம்மவர்கள் வேகமாகக் கற்றுக் கொள்வதாக அவர்களே கூறுகிறார்கள். ஆனாலும் ஜெர்மன் மொழியை உச்சரிப்பது கடினம். தமிழ் மொழி போல காதிலே தேனெல்லாம் பாயாது..."

- ச.ந.கண்ணன்



# அழகிய 'ஆட்டம்' பாம்!

'அதென்ன இன்ஸ்பிரேஷன் - 6?' என்று யோசிப்புடன் மியூசிக் அகாடமியை சென்ற வாரம் எட்டிப்பார்த்த பார்வையாளர்களுக்கு, ஜிலீரென டான்ஸ் ட்ரீட் காத்துக் கொண்டிருந்தது.

டிஜிட்டல் தூறல் தொடங்கியதும் படபடவென்று பட்டாம்பூச்சிகள் போல பறந்து வந்தனர் குலோப் ஜாமூன் இளைஞர் / இளைஞிகள். கண்களைப் பறிக்கும் வகையில் இருந்தன அவர்களது பளிச் பளிச்





கதிர்வீச்சு காஸ்ட்யூம்ஸ். ராக், பாப், ஜாஸ் என்று எல்லா இசை வகையறாக்களுக்கும் வளைந்து கொடுத்து சுழன்று சுழன்று இவர்கள் ஆடியபோது, தூறல் வலுத்து ஒரு மெகா புயல் ஆரம்பமானது.

இப்படியெல்லாம் கூட ஆட முடியுமா என நம் விழிகள் விரிந்தன. 'இதையெல்லாம் விட்டுவிட்டு 'குத்தாட்டம்' போடுகிறதே தமிழ் சினிமா' என்ற ஆதங்கமும் பிறந்தது.

சில சுவாரசியங்கள். மேடையில் புகையை சற்று அதிகமாகவே 'அள்ளி' விட்டதால், ஏதோ கொசு மருந்து போலும் என்று நினைத்து ஆடிக் கொண்டிருந்த சில குட்டீஸ் பட் பட்டென்று இரண்டு கைகளையும் தட்டி, இல்லாத கொசுவை விரட்டிக் கொண்டிருந்தார்கள்.

இந்த டிஜிட்டல் திருவிழாவுக்கு நடனப் பயிற்சியளித்தவர்கள் ஸ்விங்கர்ஸ் குழுவினர் (டைரக்டர் - பிரச்னா). நியூயார்க்கிலிருந்து வந்திருந்த ஆட்ரியன் ஜுவான், ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருந்த பீட்டர் பரால் இருவரின் நடனமும் நிகழ்ச்சியின் ஹைலைட்டாக அமைந்திருந்தது.

மொத்தத்தில் துள்ளியது இளமை... அந்த எக்கோ இன்னும் நெஞ்சுக்குள்!

**- மருதன்**

படங்கள்: **முகில்**

# இளமை கல்கி

# "நைசா பேசும் பைசா பார்ட்டி!"

**லக்ஷ்மி - ராஜ் டீவியில் 'ஹிட் லிஸ்ட்', 'புதிய பாடல்', 'கோலிவுட் லைவ்' என பல நிகழ்ச்சிகளில் தௌசன்ட் வாலா ரேஞ்சுக்கு பட்படாரெனப் பேசி வரும் கலகலப்பான பாலக்காட்டு பாலசுந்தரியுடன் ஒரு லைவ் சாட்!**

**படிப்பு**

எல்.கே.ஜியிலிருந்து பி.ஏ வரைக்கும் படிச்சிருக்கேன். நான்தான் ஸ்கூல்லயே ஃபர்ஸ்ட் வீட்டுக்கு வர்றதில. இன்னிக்கு வரைக்கும் கணக்குல ரொம்ப வீக்காவே இருக்கேன்... தெரியுமா!

**ஹிட் லிஸ்ட்**

ரொம்ப லெங்த்தியா இருக்கும்... ஓகேவா... நம்பர் ஒன், சூர்யா, அடுத்து ஷாருக் கான், முகம்மது ரஃபி, கிஷோர் குமார்... இப்படி சொல்லிக்கிட்டே போகலாம்.



**காதல்?**

உடனே கேட்ருவீங்களே...! ஒவ்வொருத்தருக்கும் கண்டிப்பா வர வேண்டிய விஷயம். ஆனா அந்த நல்ல விஷயம் இது வரைக்கும் எனக்கு வரவே இல்ல... அதான் ஏன்னு தெரியலை. ஹலோ... நான் இவ்ளோதான் சொல்லியிருக்கேன்... இதுக்கும் மேல எதுவும் எழுதிடாதீங்க!

**ஆடம் டீஸிங்**

அதுதான் என்னோட காலேஜ் டைம் ஹாபி... காலேஜுக்குள்ள ஒரு பையன் தனியா வந்தாப் போதும்... நாங்க குரூப்பா சேர்ந்து கலாய்ச்சு எடுத்துடுவோம்... ஆனா இப்போ அதுக்கு சான்ஸே இல்ல!

**கோபம்**

எல்லா விஷயத்துக்கும் வராது... ஆனா என்னைப் பத்தி எனக்கேத் தெரியாம தப்பாப் பேசி, அது எனக்குத் தெரிஞ்சிடுச்சுன்னா... அவ்ளோதான், சத்தம் போட்டே காலி பண்ணிடுவேன்.

**தங்கிலீஷ்**

தங்கிலீஷ்ல பேசறது தப்பே இல்ல... தமிழ்லயே பேசறேன்... இங்கிலீஷ்லயே பேசறேன்னு சொல்லிட்டு, தப்புத் தப்பா பேசறதைவிட தங்கிலீஷ் பெட்டர்!

**சினிமா**

நடிக்கறதுக்கே ஆர்வமே இல்ல... ஆனா இப்போ பாட்டு கத்துக்கிட்டு இருக்கறதால, வருங்காலத்துல சினிமாவில பாட ஆசையா இருக்கு.

**லைஃப் பார்ட்னர்**

என் மேல ரொம்ப அன்பா இருக்கணும்... என்னைப் பத்திரமா பாத்துக்கணும். முக்கியமா நைஸா பேசும் பைசா பார்ட்டியா இருக்கணும்! (அப்படிப் போடு!)

**- முத்து**

படம் : **ராஜன்**

# கின்னஸ் விரல்கள்!

ரதே ஷ்யாம் படேல்... இறைவன் இந்த இளைஞருக்கு விரல்களை வித்தியாசமாகப் படைத்திருக்கிறார். அட ஆமாங்க... ஷ்யாம் தன் விரல்களை மடக்கி, உள்ளங்கையை மட்டுமல்ல, பின்னங்கையையும் அநாயாசமாகத் தொடுகிறார்.

5...4...3...2...1... விறுவிறுப்பான அந்த 30 நொடிகள் தொடங்குகிறது. ஷ்யாம் தன் பின்னங்கையில் முட்டையை வைக்கிறார். விரல்களை பின்புறமாக மடக்கி, சுக்கு நூறாக... ச்சீ... முட்டை நூறாக உடைக்கிறார். முப்பதாவது நொடி... 22 முட்டைகள்... ஆஹா... கின்னஸ் சாதனை!

இதற்கு முந்தைய சாதனை பெங்களூர் கே.எஸ். ராகவேந்திரா உடைத்த 13 முட்டைகளாம். ரெய்ப்பூரைச் சேர்ந்த 22 வயது ஷ்யாம், 22 முட்டைகளை (ஆஹா... என்ன பொருத்தம்!) உடைத்து, சென்ற வாரம் சென்னையில் முட்டைய.. ச்சீ... முந்தைய சாதனையை உடைத்திருக்கிறார்.

மூன்று மாநிலங்களில் முயற்சி பண்ணியிருக்கிறார். ஸ்பான்சர்ஸ் கிடைக்கவில்லை. சென்னை அண்ணா நகர் டைட்டன் ஷோரூம் உரிமையாளர் சிவகுமார், ஸ்பான்சர் பண்ண, அமர்க்களமாக அரங்கேறியது சாதனை. "வேற என்ன பண்ணுவீங்க?" என்றோம் ஷ்யாமிடம்.

ஒரு டேபிளில் தன் கை விரல்களை மடக்கி வைத்து, நம்மை அதன் மேல் ஏறி நிற்க வைத்து விட்டார் அசால்ட்டாக! நமக்குக் கால் வலிக்க, இறங்கிவிட்டோம்! கார், பைக்குகளை எல்லாம் ஏற்றியிருக்கிறாராம்! அடுத்து 30 விநாடிகளில் 30 முட்டைகளை உடைக்க முயற்சிக்கப் போகிறாராம்.

"ஓ.கே! அது ஏன் மார்ச் - 8 பெண்கள் தினத்துல இந்த சாதனையைப் பண்ண தேர்ந்தெடுத்தீங்க?" என்றோம்.

'அட! அப்படி நான் யோசிக்கவே இல்லையே!' சிரிக்கிறார் விழிகள் விரிய, அந்த கின்னஸ் விரல்கள் இளைஞர்.

- முகில்



# அசல் தராசு!

'**கல்கி**' தலையங்கத்தின் துணிச்சலான அணுகுமுறையைக் கண்டு வியந்திருக்கிறேன். தராசு கேள்வி பதில் என்றால் அசல் தராசுதான். அப்படி இப்படிச் சாய்ந்து நான் பார்த்தது இல்லை. ஒரு முள்ளின் முனை போன்ற கூர்மைக்கும் அதில் குறைவு இல்லை. அட, இந்தக் கோணம் நமக்குத் தோன்றாமல் போயிற்றே என ஏங்கியதும் உண்டு.

கல்கியில் எனக்கு மிகப் பிடித்த இன்னோர் அம்சம், அதன் சமூக அக்கறை. கல்கியால் எத்தனையோ நல்ல விஷயங்கள் நடந்திருக்கின்றன.

- லேனா. தமிழ்வாணன்

படம்: ஸ்ரீஹரி



# Vivekananda Vidya Kala Ashram

"M.S. Jain Gyana Vihar" Puliyur Village, Sivanvoil P.O,
Thiruvallur District, Tamilnadu. Pin : 602 024
Phone : 954116 - 224650 & 224673
Mobile No. 94440 - 33934/94440 - 33935
email: vvka@vesonline.org

## An ideal residential school for Boys Near Chennai

*Located in a 25 acre farm in serene rural surroundings. Pollution free air and plenty of water.*



*Experienced and dedicated teachers residing in the campus impart value - oriented education, rooted in Bharatiya tradition and culture. Instructional programme includes prayer, yoga, drill, games, karathe, instrumental music, swimming and vedic recitation, agnihotram besides academic classes aligned to CBSE with choice of Hindi/Tamil as second language.*



*Fully equipped dormitory type hostel accommodation with wholesome vegetarian food and fresh milk from Goshala in the campus.*

*School is promoted by* ***Vivekananda Educational Society*** *which has over 30 years of experience in establishing and running many reputed schools in and around Chennai city.*

*Admission open to classes VI, VII, VIII and IX for the session commencing from June 2005. Applications should be made before 30th April 2005. Prospectus and application forms may be obtained on payment of Rs.100/-= by M.O. or D.D. Payable to "**Vivekananda Educational Society**", addressed to The Secretary, Vivekananda Educational Society, "Sri Paduka" Krishna Apartments. H-Block, 1053 Poonamallee High Road, Chennai 600 084.*




***Phone (44) 23452120 & 23452121.***

***Application form / Prospectus can be downloaded from www.vvka.org***

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka